நீங்களே கண்டுகொள்ளுங்கள்

# மின்னலடிக்கும், ஸூப்பர் ரின் வெண்மை.. இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதையும் மிஞ்சும் வெண்மை







வேளை தவறாமல் உபயோகியுங்கள் ஸூப்பர் ரின். எத்தகைய வெள்ளைவெளேர் சலவை கிடைக்கிறது பாருங்கள்—இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதையும் மிஞ்சும் வெண்மை அது. காரணம், மேம்பட்ட வெளுப்பூட்டும் சக்தி அடங்கியது ஸூப்பர் ரின். நீங்களே கண்டுகொள்ளுங்கள்.




**இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதையும் 'விட அதிக வெளுப்பூட்டும் சக்தி.**

லிண்டாஸ்-RIN 34.3317 TM (RR)

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

# Kalki Shopping Page

# Kalki Shopping Page




*Our Stockists:*

1. M/s D. Srinivasa Iyengar, Maligai, West Car Street, Chidambaram & Cuddalore
2. M/s K. S. Muthuswamy Iyer Son R. V. Venkatarama Iyer, Maligai, Railady, Mayuram
3. M/s R. Ganapathi Pillai, Maligai, Railady, Mayuram
4. Thanjavur Cooperative Wholesale Stores Ltd., Thanjavur
5. Mayuram Cooperative Wholesale Stores Ltd., Mayuram
6. M/s A. V. M. Muthukrishnan & Bros. Pudupalayam, Cuddalore
7. M/s P. Ramalingam, 26, Bhandarkar Road, Matunga, Bombay-19
8. M/s P. V. R. K. & Co., 321, Avenue Road, Bangalore-2
9. M/s Geetha Stores, 115, Jeweller Street, Bangalore-1

**M/s Bharathi & Co**
**27, Mundy Street,**
**Vellore-4**

★

**Dhanalakshmi & Co**
**21-B, M. G. Pudur 1st Street,**
**Tirupur—638604**

## SUKI ELECTRONICS

**Best Place to Choose your**

**STANDARD**
**televista**
**Solidaire** TV sets



Available on cash or easy instalment

Cost of Antenna, installation & delivery charges free for cash purchases.

**SUKI ELECTRONICS**

16, Veeraraghavan Street,
Nanganallur,
Madras 600 061.

C-3, Kapaleeswarar Shopping Complex, V.A. Road,
Near Saibaba Temple
Mylapore, Madras 600 004.

Phone : 433019.

# ஏன் எங்கும் வெஸ்டெர்லி ?

நான்கு வித அழகான குளிர்ச்சி மிகு வண்ணங்களில் எந்த இடத்தையும் அலங்கரிக்கும் வகையில் உள்ளது. அதிகபட்ச காற்றை அளிக்கவல்லது. தனித் தன்மை வாய்ந்த 'சோக்' ரெகுலேட்டர் மின்சாரச் செலவை மிச்சப்படுத்துகிறது. நியாயமான விலையில் கிடைக்கிறது. கவர்ச்சி மிகு வடிவமைப்புடன் கூடியது. நீங்களும் ஏன் வெஸ்டெர்லியே வாங்கக் கூடாது?

## வெஸ்டெர்லி

ஸீலிங் ஃபேன்களில் சிறந்தது.

national 748

# Kalki Shopping Page

இன்றே வாங்குங்கள்
விலை குறைக்கப்பட்டுள்ளது!
மக்கள் விரும்பும் மகத்தான
மின்விசிறி
**நோவா** ஸ்டார்



5 வருட
உத்திரவாதம்
உள்ளவை

**உம்பிச்சி ஏஜன்ஸீஸ்**
நெ. 1, சத்தண்ணை நாயக்கன் தெரு,
(நேரு டிம்பர் மார்க்கெட்)
சென்னை-600 007. போன்: 33502

---

with every purchase of
**GULMARG**
**REFRIGERATOR**

Free
ONIDA
WATCH
Worth
Rs. 458





Electronics Limited
makes good things even better

**S.C.Shah**
4, Whites Road, Madras-14.
PHONE : 83375 & 88671

---

# ஸ்டாண்டர்ட்

உங்கள் வீட்டில் ஒரு மினி அரங்கு வைத்து இருக்கும்
பெருமிதத்தை அடையலாமே-ஸ்டாண்டர்ட் டிவி வைத்து
இருப்பதின் மூலம்




இது சாத்யமே. காரணம் ஸ்டாண்டர்டு டிவியில் எங்களது பலவருட நுட்பமான அறிவுத்திறனும், தரக்கட்டுப் பாட்டுக்கு உட்பட்ட பல சிறந்த உறுப்புக்களின் சேர்க்கையுமே காரணம். உங்கள் மனம் விரும்பும் மிகச்செவ்வனேசெய்த டிவி இது ஒன்றுதான் அது நிச்சயம் எங்களுககு தெரியும்.
வாங்கிய பின் நீங்களும் உணர்வீர்கள்.

பெயருக்கு ஏற்றதரமுள்ள டிவி: **STANDARD TV**

**GANGA RADIOS**
Gangadhareeswarar Koil
Street, Purasawalkam
Madras-600 007
Ph : 661464

**M. N. ELECTRONICS**
'Jammi Building'
Royapettah High Road,
Madras-600 004
Ph : 74842

**JAISHANKAR COMMERCIAL CORPORATION**
84, Dr Radhakrishnan Salai
Madras-600 004
Ph : 89767

FOCUS

# காணாமல் போன பஸ்!



அக்டோபர் 20ம் தேதி அடையாறு பஸ் நிலையத்தில் நிறுத்தி வைக்கப்பட்ட பஸ் ஒன்று திடீரென்று காணாமல் போய்விட்டது..

—பத்திரிகைச் செய்தி

இதைப் பற்றி விவரங்கள் அறிய அடையாறு பஸ் நிலையத்துக்குச் சென்றேன். யாரும் இதைப் பற்றி என்ன கேட்டாலும் சொல்ல மறுத்து விட்டார்கள். ஒரே ஒரு கண்டக்டர் மட்டும் மெல்லச் சுற்றுமுற்றும் பார்த்தவாறு விவரங்களைச் சொன்னார்.

அடையாறு டெப்போவைச் சேர்ந்த பஸ்கள் இரவு 9-30க்குக் கடைசியாக வந்து அங்கே ஒப்படைக்கப்படும். அன்று அந்த பஸ்ஸில் பயணிகளுடன் ஒருவர் வந்து கொண்டிருந்தார். அவர் பஸ்ஸை ஓட்டிய டிரைவருக்கு ரொம்ப வேண்டியவராகத் தோன்றினார். அவர் பேச்சிலிருந்தே அவர் குடித்துள்ளவர் என்பது தெரிந்தது. இரவு பஸ் வந்தவுடன் அவரைத் தவிர மற்ற எல்லாப் பயணிகளும் இறங்கினர். குடி போதையில் இருந்த நண்பர் பற்றி டிரைவர் கவலை கொள்ளவில்லை. அருகே உள்ள சிற்றுண்டி சாலைக்குச் சாப்பிடச் சென்று விட்டார். பஸ் கண்டக்டர் டெப்போ ஆபீசில் வசூலான தொகைக் கணக்குக் கொடுக்கச் சென்று விட்டார்.

சில நிமிடங்களில் சிற்றுண்டி சாப்பிடப் போன டிரைவர் தம் வண்டி ஓசையைக் கிளப்பும் கேட்டவே வெளியே வந்தார். அப்போது குடி போதையில் இருந்த நபர் அந்த பஸ்ஸைக் கிளப்பிக் கொண்டு, வேகமாக ஓட்டிச் செல்வதையும் பார்த்தார்.



திரு ஆர். சி. சௌபே

உடனே கதறிக் கொண்டு டிப்போவில் புகார் செய்தார்.

வண்டியில் அதிக டீசல் இருந்ததாலும் மனிதர் மிதப்பில் இருந்ததாலும் எப்போதும் செல்லும் மார்க்கத்தை விட்டு வண்டி வேறு திசையில் அசுர வேகத்தில் பறந்தது.

சாதாரணமாக எந்தப் பல்லவன் பஸ்ஸுக்கும் தனியாகச் சாவி கிடையாது. பொத்தானை அமுத்தினாலே பஸ் கிளம்பிவிடும்.

அந்த நபரின் குடி போதை மெல்லத் தெளிய எண்பது மைல் தொலைவில் உள்ள திண்டிவனம் எக்ஸ்பிரஸ் பஸ் நிலையத்தில் யாரும் அறியாதவாறு அதை ஓர் ஓரமாக நிறுத்திவிட்டு ஓடிவிட்டார்.

பஸ்ஸின் டிரைவரைப் போலீஸ் கைது செய்துள்ளது.

தற்போதுள்ள புதிய முறைப்படி டிரைவரோ, கண்டக்டரோ வெளியே போக நேர்ந்தால் பஸ்ஸை டெப்போவைச் சேர்ந்த டைம் கீப்பரிடமோ, அல்லது சோதனையாளரிடமோ ஒப்படைத்து விட்டுத் தான் போக வேண்டும்'' என்று கூறிய அந்த அடையாறு டெப்போவைச் சேர்ந்த கண்டக்டர் தம் பெயரைச் சொல்ல மறுத்து விட்டார். நியாயம்தானே?

இந்த இதழில்
**ரஜனிகாந்த்**
BLOWUP POSTER
இடம் பெறுகிறது



அடுத்த வாரம்:
**ஸ்ரீதேவி**

## TURF AGENCIES

**சென்னை ரேஸ் கிளப் செயலாளர் திரு ஆர். சி. சௌபே.**

''என்னைப் பொறுத்தவரையில் குதிரைப் பந்தயம் ஒரு களியாட்டம்தானே தவிர சூதாட்டமல்ல'' என்று வாதாடுகிறார் சென்னை ரேஸ் கிளப் செயலாளர் திரு ஆர். சி. சௌபே. ''குதிரைகளின் நல்ல ஓட்டம், ஜாக்கிகளின் புத்திசாலித்தனம் ஆகியவையே இதற்கு முக்கிய தேவை. சூதாட்டம் அதிர்ஷ்டத்தை மட்டும் நம்பி இருக்கிறது. குதிரைப் பந்தயம் ஆற்றலையும் நம்பியுள்ளது. இரண்டுக்கும் இதுதான் வித்தியாசம்.''

அவர் கூறுவதை நாம் ஒப்புக்கொள்ளா விட்டாலும் அவர் எண்ணத்துக்கு மதிப்பு அளிக்கிறோம். தமிழக அரசின் புதிய டர்ஃப் ஏஜென்ஸி ஒழிப்புச் சட்டம் பற்றிக் கேட்கிறோம். அவர் கூறுகிறார்:

''தமிழக அரசு பெட்டிங் சட்டம், மற்றும் போலீஸ் சட்டத்தின் கீழ், சென்னைக் குதிரைப் பந்தய மைதானத்தில் அதுவும் பந்தய நாட்களில் மட்டும்தான் பணம் கட்டிப் பெட்டிங் செய்ய முடியும்.

தனியார் நிறுவனங்கள் (Turf Agencies) கொண்ட குழு கோர்ட்டிடம் அனுமதி வாங்கியது. அதன்படி அவர்கள் பெட்டிங் ஏற்றுக்கொள்ளாது, ஒரு ஏஜெண்டாக மட்டுமே செயல்பட வேண்டும். ரேஸ் பந்தய மைதானத்தில் இருக்கும் கூட்டத்துக்கும், மற்ற சந்தடிக்கும் பயந்து, மக்களும் கூட்டமில்லாத இந்தத் தனியார் நிறுவனங்களில் டிக்கட் வாங்கினார்கள்.

சில காலம் கழித்து இந்த நிறுவனங்கள், அரசு உத்தரவுப்படி செயல்படாமல், தகாத வழிகளிலும் செயல்படத் தொடங்கின.

கமிஷன் தொகை தவிர, செய்யும் இந்தச் செயலுக்குத் தனியாக மக்களிடம் தொழில் கட்டணம் வேறு வசூலித்தன. (Service charges)

மக்கள் ஜெயிக்கும் தொகையிலும் பங்கு கேட்டன. முழுத் தொகையை வென்ற நபருக்குக் கொடுக்காமல் குறைத்துத்தான் கொடுத்தன.

ஓர் ஆச்சரியமான விஷயம். எங்கள் ரேஸ் கிளப்பில் விற்கும் குறைந்த தொகை டிக்கட் ரூ. 5. ஆனால் அதே டிக்கட்டை தனியார் நிறுவனம் ஒரு ரூபாய்க்குத் தந்தது. இதிலிருந்து நீங்களே என்னவெல்லாம் நடக்கும் என்று ஊகித்துக் கொள்ளலாம்.

இந்த மோசடிகளைத் தவிர்ப்பதற்காக அரசு இந்த நிறுவனங்களுக்குத் தடை விதித்துள்ளது. எப்போதும் ஐதராபாத் பந்தயங்கள் போன்றவற்றுக்கு ஒன்பதாயிரம் முதல் பத்தாயிரம் நபர்கள் வரை கலந்து கொள்வார்கள். இந்த அறிவிப்பு கொடுத்த மறுநாள் 16,700 நபர்கள் ஐதராபாத் பந்தயத்தில் கலந்துகொண்டது. இண்டர்வென்யூ பெட்டிங் சரித்திரத்தில் ஒரு ரிக்கார்ட் ஆகும். இந்நாள்வரை இந்த அதிகப்படி நபர்கள் எங்களிடம் வராமல் வெளியே சென்றிருக்கிறார்கள். குதிரைப் பந்தய மைதானத்தில் கட்டப்படும் தொகை எந்தவித மோசடிக்கும் ஆளாகாது.

1977-78ம் வருடம் நாங்கள் அரசுக்கு இரண்டு கோடியே எழுபது லட்சம் ரூபாய் வரி செலுத்தினோம். ஆனால் 1978-79ம் வருடம் இரண்டு கோடியே முப்பது லட்ச ரூபாய்தான் கட்ட முடிந்தது. காரணம் அதிகமாகத் தோன்றிய தனியார் நிறுவனங்கள் பந்தய மைதானத்துக்கு நியாயமாகச் செலுத்த வேண்டிய தொகையைச் சரியாகச் செலுத்தாமல் கோல்மால் செய்ததுதான்!''

—''சிக்கி''



# இளையராஜாவைக் கேளுங்கள்!



கல்கி நேயர்களின் கேள்விகளுக்கு இளையராஜா பதில் அளிப்பார்!

ஃபோன் மூலம் மட்டுமே கேள்விகள் கேட்கலாம். வெளியூரிலிருந்தோ சென்னையிலிருந்தோ பேசலாம்.

நவம்பர் இரண்டாம் தேதி வெள்ளிக்கிழமை காலை 7:30 முதல் 8:30 வரை ஒரு மணிநேரம் மட்டும் கல்கி நேயர்களுக்காக இளையராஜா ஒதுக்கிக் கொண்டுள்ளார்.

மற்ற சமயங்களில் ஃபோன் பண்ண வேண்டாம்.

**ஃபோன் நெம்பர் 443319.**

புத்திசாலித்தனமான சிறந்த ஒரு கேள்விக்கு இளையராஜா பரிசு வழங்கவும் முன் வந்திருக்கிறார்.

எனவே, அர்த்தமுள்ள கேள்விக் கணைகளைத் தயாரித்துத் தொடுக்கவும். ஒருவர் ஒரு கேள்விக்கு மேல் நிச்சயமாய் கேட்கக் கூடாது.

நல்ல கேள்விகளும் அவற்றுக்கு இளைய ராஜாவின் பதில்களும் கல்கி நவம்பர் 18உ இன்னிசைச் சிறப்பிதழில் பிரசுரமாகும். பரிசு விவரமும் பரிசு பெற்றவர் பெயர், விலாசமும் அதே இதழில் இடம் பெறும்.

எனவே ஃபோன் செய்பவர்கள் முதலில் தங்கள் பெயரையும் விலாசத்தையும் சரியாக, தெளிவாக அறிவித்து விட்டுக் கேள்வியைக் கேட்கவும்.

—ஆசிரியர், கல்கி.

X-RAY

# பஹுகுணா

"அபகீர்த்தி உள்ளவனை விடக் கெட்டவனே மேல்" என்று கூறினார் பகுகுணா. எப்போது? ஜனதா கட்சியிலிருந்து விலகி, மொரார்ஜி அரசைக் கவிழ்க்க அடிகோலுவதற்கு இரண்டு தினங்களுக்கு முன்பு. பிரதமர் மொரார்ஜியிடம் வாதிடும்போது ஆர். எஸ். எஸ். பற்றியும் அதில் அங்கத்தினராக இருக்கும் ஜனதாக்காரர்கள் பற்றியும் கருத்துத் தெரிவித்த அவர் உபயோகித்த சொற்றொடர் இது. அன்று அவர் பெட்ரோலியம் ரசாயனத் துறை 'மத்திய அமைச்சர். இவரது முழுப் பெயர் ஹேம்வதி நந்தன் பஹுகுணா.

சில தினங்களில் சரண் சிங்குக்கு ஆதரவாகப் போய் அதற்குச் சன்மானமாக நிதி மந்திரி பதவியை திரு பஹுகுணா பெற்றார். இப்போது பஹுகுணாவை மந்திரி சபையிலிருந்து கழுத்தைப் பிடித்துத் தள்ளாத குறையாக ராஜிநாமா செய்யச் சொல்லி வெளியே அனுப்பியுள்ளார் சரண்.

கெட்டவர் யார்? நல்லவர் யார்? அபகீர்த்தி உள்ளவர் யார்? அபகீர்த்தி உள்ளவராகச் சித்திரிக்கப்படுபவர் யார்? எதை விட எது மேலானது? என்றெல்லாம் இப்போதேனும் பஹுகுணா புரிந்து கொண்டிருப்பாரோ? நமக்குத் தெரியாது.

நமக்குத் தெரிந்ததெல்லாம், தம்மை ஒரு ரஷ்ய ஏஜெண்ட் என்று மொரார்ஜியிடம் முன்பு குற்றம் சாட்டிய சரண் சிங்கிடம் போய் இவர் நின்றாரே அதுவும்; அவர் தமக்கு உதவிப் பிரதமர் பதவியையும் உத்திரப் பிரதேச அரசியலில் ஒரு தனி செல்வாக்கையும் அளிப்பார் என்று உள்ளுக்குள் நம்பி மோசம் போனாரே அதுவுந்தான். பஹுகுணா தமது அறுபதாவது வயதில் இன்று இங்குமின்றி அங்குமின்றி குழப்பம் மேலிட்டு நட்டாற்றில் நிற்கிறார்.

மாணவர் சங்கம், தொழிற் சங்கம் என்று வாழ்க்கையை ஆரம்பித்த இவர் 1950ல் காங்கிரஸில் சேர்ந்து உத்தரப் பிரதேச அரசியலுடன் தமது எதிர்காலத்தைப் பின்னிக்கொண்டு வாழ்ந்தபோதுதான் இவரது திறமைகளைக் கண்டுபிடித்து(!) திருமதி இந்திரா காந்தி இவரை உத்தரப் பிரதேச முதல்வர் ஆக்கினார். அதற்கு நன்றிக் கடனாக இவர் மாநில சட்ட சபைத் தேர்தல்களில் இந்திரா கட்சிக்கு வெற்றியைத் தேடித் தந்தார். அதோடு தமக்கும் அம்மாநிலத்தில் சிறந்த நிர்வாகி என்ற பட்டத்தைத் தேடிக் கொண்டார்.

அதுதான் இவர் செய்த தவறு.

தம்மையும், தமது செல்லப் பிள்ளையையும் தவிர வேறு எவரும் தமது கட்சியில் அதிகப் புகழ் பெறுவதை விரும்பாத இந்திரா, இவரை முதன் மந்திரி பதவியிலிருந்து நீக்கிய பிறகுதான் இவர் ஜெகஜீவனுடன் ஜனநாயக காங்கிரஸ் ஆரம்பித்தது. இந்திராவின் வீழ்ச்சியும் தொடங்கியது.

சமீபத்திய பேட்டி யொன்றில், "ஜனநாயகக் காங்கிரஸ் செய்த மிகப் பெரிய தவறு ஜனதாவுடன் இணைந்ததுதான்!" என்று திரு பஹுகுணா கூறியுள்ளார். இணைந்திராவிட்டால் இன்று தம்முடைய அட்ரஸ் என்னவாக இருந்திருக்கும் என்று ஏனோ இவருக்குத் தோன்றவில்லை.

இவர் நல்ல பேச்சாளர். நிர்வாகத் திறமையும், துணிச்சலாகச் செயல்படும் திறமையும் உள்ளவர்.

'பதவி மோகம்' என்பதையே ஒரு குணமாகக் கொண்டு அலையும் தற்போதைய அரசியல் தலைவர்கள் நடுவில் இவர் தமக்குச் சூட்டப்பட்டுள்ள பெயருக்குப் பொருத்தமாக ஏன் நடந்து கொள்ளக் கூடாது? ஜனநாயகத்தில் உண்மை நம்பிக்கை, நாட்டு நலனில் உண்மையான அக்கறை, வகுப்பு வாத அரசியலை உண்மையிலேயே வெறுத்து ஒதுக்குதல் போன்ற பல நல்ல குணங்களைக் கொண்டு ஏன் செயல்படக் கூடாது?

அப்போது பகுகுணாவை நாம் வெகு பேஷ் குணா எனப் பாராட்டலாம் அல்லவா?

— பீ. ரங்கநாயகி




வோட்டு
ஜனதா
காங்கிரஸ்
லோக் தளம்
நானும் உதவி செய்கிறேனே!
இடது கம்யூ
காங்கிரஸ் (இ)
ரயில் வண்ணம்!
போலீஸ் கிளர்ச்சி
கிளர்ச்சி வாபஸ்
தேர் நகருமா?
ஸ்வரன் சிங்



# கல்கி

1979 நவம்பர் 4
சித்தார்த்தி ஐப்பசி 18
மலர்: 38 இதழ்: 14


தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# தெரஸா

'ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காணலாம்' என்பது மெய்யானால் அன்னை தெரஸா தினந்தோறும் இறைவனைப் பலமுறை பிரத்யட்சமாகத் தரிசிக்கும் பாக்கியம் பெற்ற புண்ணியவதியாகிறார். இதற்கு மறுபுறமாக அந்த ஏழைகள் அன்னை தெரஸாவையே தங்களை ரட்சிக்க வந்த தெய்வமாகக் கருதி வணங்குகின்றனர். உதவுகிறவர், உதவி பெறுகிறவர் இருவருமே தெய்வமாகும் இந்த விநோதத்தைக் கண்டு நாம் வியக்கிறோம். வியப்பதோடு சரி!

தினந்தோறும் நமது கண்களில் எத்தனையோ ஏழைகள் தென்படுகிறார்கள். 'அடடா! தாழ்வுற்று வறுமை மிஞ்சிக் கிடக்கும் இவர்களுக்கெல்லாம் என்றுதான் விமோசனம்?' என்று அனுதாபப்படுகிறோம். அத்துடன் முடிந்தது கதை!

சிலர் 'நம்மாலான உதவி' என்று அனாதை ஆசிரமங்களுக்கோ வெள்ள நிவாரண நிதிக்கோ பணம் தந்துவிட்டு கையைத் தட்டி உதறிவிடுவார்கள்.

ஆனால் தெரஸா நம்மைவிட மேலானவர் ஆதலால், ஏழைகளின் துயர் துடைக்க அனுதாபப்படுகிறவர்களும் நன்கொடை வழங்குகிறவர்களும் இருந்தால் போதாது, அவர்களிடையே சென்று பணியாற்றுவோர் வேண்டும் என்று உணர்ந்திருக்கிறார். எனவேதான் தமது கன்னிமாட சீருடையைக்கூடத் துறந்துவிட அனுமதி பெற்று, தாம் பணியாற்றும் இடத்துக்கு ஏற்ப சாதாரணப் புடவையை அணிந்து ஏழைகளிடம் எளியவராகப் பழகி துயர் துடைக்கிறார்.

தெரஸா செய்கின்ற அளவில் இல்லாவிட்டாலும் அவரவர் சக்திக்கு ஏற்ப எத்தனையோ பல அனாதை ஆசிரமங்களையும் அபலை மறுவாழ்வு இல்லங்களையும் நாடெங்கும் பலர் நடத்தி வருகின்றனர். இதனை உணர்ந்துதான் அன்னை தெரஸாவும் நோபல் பரிசு அறிவிக்கப்பட்டதும், ''ஏழைகளின் சார்பில் ஏற்கிறேன். ஏழைகள் இருப்பதை உலகம் உணர்ந்து அங்கீகரித்திருக்கிறது என்பதற்கு இப்பரிசு ஓர் அடையாளம்'' என்றார்.

அவரது பெருந்தன்மையை நாம் போற்றுகிறோம். ஆனால் ஒன்றல்ல, நூறல்ல, ஆயிரம் தெரஸாக்கள் தோன்றினாலும் இந்தத் தேசத்திலிருந்து வறுமைப் பேயை விரட்டிவிட முடியாது. அவர் இங்கு விசுவரூபமெடுத்துள்ள பிரச்னையின் சுண்டுவிரலை மட்டுமே அணுகியுள்ளார் என்றால் அது மிகையாகாது.

ஏழைமை ஒழிய வேண்டுமானால், அனைவருக்கும் வேலை வாய்ப்பு, அனைவருக்கும் படிப்பறிவு, அனைவரும் உணரக்கூடிய குடும்பக் கட்டுப்பாடு திட்டம் இவை அமலாக வேண்டும்.

ஆனால், இன்றைய நமது அரசியல்வாதிகள் 'ஏழைமையை ஒழிப்போம்' என்று கோஷம் போடுகிறார்களே ஒழிய, அனைவருக்கும் படிப்பறிவு, அனைவருக்கும் வேலை வாய்ப்பு என்பனவற்றில் அவர்களுக்கு ஆத்மார்த்தமான நம்பிக்கை இல்லை! காரணம் இல்லாமலும் போகவில்லை. அனைவரும் படிப்பறிவு பெற்றுவிட்டால், தனி நபர் பிரபை அல்லது 'ஹீரோ ஒர்ஷிப்' இங்கே செல்லுபடியாகாது. அனைவருக்கும் வேலை வாய்ப்புக் கிடைத்து விட்டால் இரண்டுக்கும் மூன்றுக்கும் ஐந்துக்கும் பத்துக்கும் வோட்டுக்களை விலைபேச முடியாது. தன்னலனை மறந்து தேச நலனையே கருதும் அறிவாளிகள் ஆட்சிபீடத்தில் அமர்ந்து திறம்படத் திட்டம் தீட்டி அமல்படுத்தினாலே தேசத்தில் வறுமையும் பிணியும் ஒழிய முடியும்.

தெரஸாவின் பணி மகத்தானது. அதைக் குறைத்து மதிப்பிடாமல் அவரை வாழ்த்தி வணங்கும் போதே, உடனடி நிவாரணம் வேறு நிரந்தரப் பரிகாரம் வேறு என்பதைப் புரிந்து கொள்வோம். நாட்டில் இங்குமங்குமாகச் சிலபல ஏழைகளின் மறுவாழ்வு வேறு, தேசத்திலுள்ள அனைத்து ஏழைகளின் ஒட்டுமொத்தமான புனர்வாழ்வு வேறு என்பதை மறவாதிருப்போம்.

# மீண்டும் புரூஸ்லீ!



**பு**ரூஸ் லீ நடித்து சென்னையில் நவம்பர் முதல் வாரத்தில் திரையிடப்பட விருக்கும் படம் **Return of the Dragon**

பல படங்களில் நடித்து முடித்த புரூஸ் லீ தமது உண்மையான திறமையைக்காட்ட தாமே ஒரு படக்கதை எழுதி, இயக்கி நடித்தால் என்ன என்ற முடிவுக்கு வந்தார். அதன் விளைவுதான் இப்படம்.

புரூஸ் லீ ஒரு புத்தகப் புழு. அவருக்கு எப்பொழுதுமே தமது கராத்தே சண்டையின் மீதும், அதைப் பயிலும் நண்பர்கள் மீதும் அலாதியான ஒரு விருப்பம். அதனாலேயே தம் படங்களிலெல்லாம் உண்மையான கராத்தே வீரர்களையே நடிகர்களாகப் பயன்படுத்துவார். இந்தப் பட்டியலில் சேர்ந்தவர்தான் அமெரிக்க கராத்தே வீரர் **Chuck Norris** மற்றொருவர் **Bob Wall**.

இப்படத்தின் பெரும்பகுதி ரோம் நகரத்திலேயே படமாக்கப்பட்டது. அந்த நகரத்தின் தெருக்களிலும், விமான நிலையத்திலும், போக்கு வரத்து மிகுந்த சாலைகளிலும், எவ்வளவு சீக்கிரமாகப் படமாக்க முடியுமோ அவ்வளவு சீக்கிரமாகப் படமாக்கினார்கள். ஒரு நாளைக்கு 14 மணி நேரம் வீதம் உழைத்து இரண்டே வாரத்தில் ரோம் நகரக் காட்சிகள் படமாக்கப்பட்டன.

புரூஸ் லீ எப்போதுமே தமது படத்தில் வரும் சண்டைக் காட்சிகளெல்லாம் சிறப்பாக அமையப்பெற வேண்டும் என்பதில் மிகுந்த கவனம் செலுத்துபவர். ஒவ்வொரு சண்டைக் காட்சி பற்றிய விவரங்களையும் பக்கம் பக்கமாக எழுதிக் கொள்வது மட்டுமல்லாமல் ஒவ்வொரு நிலையையும் ஓவியமாகவும் வரைந்து வைத்துக் கொள்வார். இப்படத்தின் கடைசியில் வரும் சக்-நாரிஸ்—புரூஸ் லீ சண்டைக் காட்சிக்கு மட்டும் இருபது பக்கங்கள் எழுதினார்! சண்டைக் காட்சிக்கு ஒரு புது ஐடியா தோன்றினால் தமது அமெரிக்க மனைவியை நிற்க வைத்து அதை ஒத்திகை பார்த்து விடுவார். சுவர் முழுவதும் கண்ணாடி பதிக்கப்பட்ட ஓர் அறையில் ஒத்திகை செய்து எப்படியெல்லாம் சண்டையிட்டால் அழகாக இருக்கும் என்று பார்த்து முடிவு செய்வார்.

இவரது படங்கள் ஒவ்வொன்றிலும் பலப் பல சண்டைக் காட்சிகள் வருமாதலால் ஒவ்வொரு சண்டையும் முற்றிலும் மாறுபட்டதாக அமைய வேண்டும் என்பதில் இவர் மிகுந்த கவனம் செலுத்துவார். ஒவ்வொரு சண்டைக் காட்சியிலும் ஒரு புது மாதிரியான ஆயுதத்தை இவர் உபயோகிக்கத் தவறுவதேயில்லை.

இந்தப் படம் முடிந்து ஹாங்காங்கில் வெளியான போது சென்஼ார் பிரச்னை எழுந்தது. கொடூரமான சண்டைக் காட்சிகள் இருக்கின்றன என்பதால் அவை நீக்கப்பட்டாலொழிய படம் வெளிவராது என்ற நிலை ஏற்பட்டது. கடைசியில் ஒரே ஒரு காட்சியை மட்டும் வெட்டி விட்டு படத்தை ஹாங்காங்கிலும் சிங்கப்பூரிலும் வெளியிட்டார்கள். வெட்டப்பட்ட காட்சி வெளி நாடுகளில் அனுமதிக்கப்பட்டது. புரூஸ் லீ சக் நாரிஸ்ஸின் தலையில் விடாமல் ஐந்து அடிகள் கொடுக்கிறார். இந்தக் காட்சி தான் வெட்டப்பட்டது.

புரூஸ் லீ தாமே இசை அமைப்பிலும் கவனம் செலுத்தினார். இவரே ஒரு வாத்தியத்தை இசைக்கவும் செய்தார். டப்பிங், செட் அமைத்தல், உடைகள் தேர்ந்தெடுத்தல், எடிட்டிங் போன்ற எல்லாவற்றிலும் இவர் உடன் இருந்தார். படம் தயாராகும் போதே பல்வேறு சமயங்களில் 700 தடவைக்கு மேல் ''ரஷ்ஷெஸ்'' பார்த்தார்.

''இந்தப் படம் மட்டும் வெளி வரட்டும்; ஐந்து மில்லியன் ஹாங்காங் டாலர் கிடைக்கும்'' என்று ஆருடம் கூறினார் புரூஸ் லீ. பத்திரிகையாளரும் மற்றோரும் கேலி செய்தார்கள். ஆனால் புரூஸ் லீ சொன்னது உண்மையாகி விட்டது. **-அசோக்குமார்**





அருள் வாக்கு

# உத்தரமேரூர் உத்தமத் தேர்தல் முறை

ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகள்

5

ஒருத்தன் மூன்று வருஷங்கள் தொடர்ந்து எலக்ட் செய்யப்படுவதற்கும் யோக்யதாம்சம் இருக்கிறது. எந்த ஒரு வருஷத்திலாவது அவன் சரிவரக் கணக்குக் காட்டியிராவிட்டாலோ, தப்புக் கையெழுத்துப் போட்டிருந்தாலோ, வேறு குற்றம் செய்திருந்தாலோ 'டிஸ்க்வாலிஃபை' ஆகிவிடுவான் (தகுதி நீக்கம் பெற்றுவிடுவான்). பொது நிர்வாகத்தில் இப்படிப்பட்ட தப்புக்கள் ஏற்படவே கூடாது என்பதில் அந்நாளில் எவ்வளவு கருத்தாயிருந்திருக்கிறார்கள் என்பது, தப்புச் செய்த அவனை மட்டுமின்றி, அவனுடைய கீழ்க்கண்ட உறவினர்கள் அத்தனை பேரையும் 'டிஸ்க்வாலிஃபை' செய்திருப்பதிலிருந்து தெரிகிறது: தகப்பனார், பிள்ளை, சகோதரர், மாமனார், மைத்துனர், சகோதரியின் புருஷன், சஹோதர — சகோதரிகளின் பிள்ளைகள், மாப்பிள்ளை, அத்தை பிள்ளை, மாமா, மாமா பிள்ளை, தாயாருடைய சகோதரி பிள்ளை. இப்படி ஒரு மெம்பர் செய்த குற்றத்துக்காக அவனுடைய பந்து வர்க்கத்தையே அடியோடு ஒதுக்கி விடுவதென்றால், அப்புறம் நிர்வாகத்தில் தவறு எப்படி நடக்கும்?

பஞ்சமா பாதகம் (பிரம்மஹத்தி, ஸுரா பானம் — அதாவது கள் குடிப்பது —, திருட்டு, குரு பத்தினியிடம் தப்பாக நடப்பது, இந்த நாலு குற்றங்களைச் செய்தவர்களோடு நெருக்கமாக உறவு கொண்டாடுவது என்பனவே பஞ்சமாபாதகங்கள்) செய்தவர்களும், அவர்களுடைய பந்துக்கள் எல்லோரும் அங்கத்தினராவதற்கு அருகதை இழந்து விடுவார்கள். பிராயச்சித்தம் செய்து கொண்டால் சில குற்றங்களிலிருந்து விமோசனமானதாகக் கருதி மெம்பர்ஷிப் தரலாம் என்றும், வேறு சில குற்றங்களுக்கோ பிராயச்சித்தம் செய்து கொண்டாலும் மன்னிப்புத் தராமல் ஆயுள் பூராவும் அப்படிப்பட்டவர்களை ஸபையிலிருந்து பஹிஷ்காரம் செய்ய வேண்டுமென்றும் ஒரு பாகுபாடு செய்திருக்கிறது. பிராயச்சித்தம் பண்ணிக் கொண்டாலும் ஸபையில் ஸ்தானத்துக்கு அருகதை பெறாதவர்கள் யார் யாரென்றால்: மாமிசம் சாப்பிட்டவர்கள், மேலே சொன்ன மஹா பாதகங்களைப் பண்ணினவர்கள், கிராம விரோதியாக இருக்கிறவர்கள், வியபசார தோஷமுள்ளவர்கள்.

பொய்க் கணக்குக் காட்டினவர்கள் மாதிரியே பொய் சாட்சியம் சொன்னவர்களும் அவர்களுடைய ஸமீப பந்துக்களும் டிஸ்க்வாலிஃபை ஆகிவிடுவார்கள். எந்த விதத்தில் லஞ்சம் வாங்கியிருந்தாலும் இதே கதிதான். ''எப்பேர்ப்பட்ட கையூட்டும் கொண்டான்'' என்று பண விவகாரத்தில் சுத்தமில்லாதவனைக் கல்வெட்டில் சொல்லியிருக்கிறது.

அந்தக் காலத்தில் ரொம்பவும் நீசத்தனமான ஒரு காரியத்தைப் பண்ணினவனைக் கழுதை மேல் ஏற்றி ஊர்வலம் விடுவது வழக்கம். தப்பு நன்றாக மனஸில் பட்டு, அவமானமடைந்து, மறுபடி அம்மாதிரி பண்ணாமலிருப்பதற்குத்தான் இப்படிச் செய்தார்கள். (குற்றவாளிகளையும் கௌரவமாக நடத்த வேண்டும், ஜெயிலை 'டிராவலர்'ஸ் பங்களா மாதிரி ஸௌக்கியமாக்கித் தரவேண்டும் என்று ஆரம்பித்தால் இந்த அன்-எம்ப்ளாய்மெண்ட் யுகத்தில் எவருக்கும் அங்கேதான் போய் ஸுகவாஸம் பண்ணலாமே என்று தூண்டிவிடுகிற மாதிரி ஆகிறது! மநுஷ்யாபிமானம் என்பது அவர்களுடைய மநுஷ்யத்வ முன்னேற்றத்தையே கெடுப்பதற்குத் தூண்டுகோலாகி விடக் கூடாது; எதிலும் பாத்திரமறிந்து செய்ய வேண்டும் என்பதற்காகச் சொல்கிறேன்.) பழைய நாளில் கழுதை மேல் ஏறினவனுக்கு ஊர் ஸபையில் இடம் இல்லை என்று பண்ணினார்கள். கழுதை மேல் ஏறினவனுக்கும், ஃபோர்ஜரி பண்ணினவனுக்கும் ஸபையில் இடமில்லை என்பதை, ''கழுதையேறினாரையும் கூடலேகை செய்தானையும் குடவோலை எழுதிப்புக இடம் பெறாததாகவும்'' என்று சாஸனத்தில் சொல்லியிருக்கிறது. அதென்ன ''குடவோலை'' என்பதைப் பிற்பாடு சொல்கிறேன்.

(தொடரும்)

# கடுகு பதில்கள்!

✖ எம். சம்பத், வேலாயுதம்பாளையம்

கே. மகாகவி பாரதி உயர்ந்த கவிஞரல்ல என்று டில்லி ஜவஹர்லால் நேரு பல்கலைக் கழகம் அறிவித்திருக்கிறதாமே?

பதில்: அப்படி அறிவித்ததாகத் தெரிய வில்லை. அவரது கவிதையைப் பற்றி ஆராய்ச்சி வேண்டாம் என்றுதான் கூறி யுள்ளது. நேரு பல்கலைக் கழகம் பற்றிக் குறை கூறிக் கொண்டிருப்பானேன்? உள்ளூர் பல்கலைக் கழகங்கள் என்ன செய் கின்றன? (கடைசி தகவல்: நேரு நினைவுக் கமிட்டிதான் நிராகரித்து விட்டதாம்.)

✖ எஸ். லீலாதேவி, நக்கல

கே. ஆங்கிலக் கவிஞர்களுள் தங்களைக் கவர்ந்தவர் யார்?

ப: ஷேக்ஸ்பியர். அவரது நாடகங்கள் படிப்பதற்கு அருமையானவை. சொல் நயம் அபாரம். கல்லூரிகளில் ஷேக்ஸ் பியரைப் பாடபுத்தகத்தில் வைத்து மாண வர்களுக்கு அவர் மேல் தீராத பகையை ஏற்படுத்தி விட்டனர். பரீட்சை பயம் இல்லாமல் சும்மா எடுத்துப் படியுங்கள். தெவிட்டாத சுவையை அனுபவிக்க முடியும்.

✖ ராஜமூர்த்தி, சென்னை-1

கே. காந்தியைப்போல் எல்லோரும் வாழ்ந்தால் எப்படி இருக்கும்?

ப: சட்டை தயாரிப்பவர்கள் வயிற்றில் ஈரத் துணியைப் போட்டுக் கொள்ள வேண்டியிருக்கும்.

✖ சி. எஸ். பாஸ்கரன், சென்னை-4

கே. பல்லவனில் தலைமுடி பறக்கப் பறக்கப் புட்போர்டில் போனதுண்டா?

ப: பல்லவனில் போனதுண்டு. புட்போர் டில் போனதுண்டு. தலை முடி பறக்கப் பறக்க....? என் தலையில் கிரீடம் கிடை யாதே!






✖ மணியன், திண்டுக்கல்

கே. குழந்தைகள் ஆண்டிலாவது A படங்களை விடுத்து B (பாலசந்தர்) டைரக்டர்கள் C (சில்ட்ரன்) படங்களை எடுப்பார்களா?

ப: அவைகளுக்கு D (டிமாண்ட்) இல்லாமல் E ஓட்டி வசூலில் F(ஃபெயில்) ஆகாது என்பது என்ன நிச்சயம்?

✖ துரைராஜ், கோவை-12

கே. ஊருக்கு உபதேசம் செய்வதுண்டா?

ப: கிடையாது. ஊருக்கு உபதேசம் செய் யாதே என்று பலருக்கு நான் தினமும் சொல்லி வருகிறேன்!

✖ ஜெஃப்ரி, கல்லிடை

கே. ராஜ் நாராயணனை எதிர்த்துப் போட்டியிடும் ஜோஹரைப் பற்றி சிலவரிகள்...?

ப: ஜோஹர் சிறந்த நகைச்சுவையாளர். பிலிம்ஃபேர் பத்திரிகையில் பல வருடங் களாக கேள்வி–பதில் எழுதி வருகிறார். சாமர்த்தியமான, நகைச் சுவையான பதில்கள். 'சூர்யா' இதழில் இந்திய சரித்திரத்தை நகைச் சுவையாக எழுது கிறார். மிகவும் நன்றாக இருக்கிறது. ஜோஹருக்கு அரசியல் தேவையில்லை.

✖ சித்ரா சுப்பராமன், சென்னை-10

கே. 'உடன் பிறந்தே கொல்லும் வியாதி சந்தேகம்' என்பது சரியா?

ப: இல்லை. நம்பிக்கைகள் மட்டும் மனித நாகரிகத்தை வளர்க்கவில்லை. மனிதனின் பல நூறு சந்தேகங்களினாலும்தான் சமூகம் முன்னேறியுள்ளது. சந்தேகப்படுவது வியாதி அல்ல. சந்தேகம் மட்டுமே பட்டுக் கொண்டிருப்பதுதான் தவறு.

பரிசு பெறுபவர்:

**மணியன்,**
**6, வேப்பர் தோப்புத் தெரு,**
**திண்டுக்கல்.**

# நீங்காத நினைவுகள்

மீ.ப.சோமு



ஸ்ரீ மீ. ப. சோமு, டி. கே. சி., நடராஜன்.

இந்த உலகத்தில் நாம் திட்டமிடுகிறபடியே வாழ்க்கையின் நிகழ்ச்சிகள் நடந்து விடுகின்றனவா?

என் தகப்பனார் என்னை ஒரு வழக்கறிஞனாக ஆக்க வேண்டும் என்று ஆசைப்பட்டார். என் தாயார் நான் ஒரு சங்கீத வித்வானாக வேண்டும் என்று விரும்பினார். ஆனால் இரண்டுமே நடைபெறவில்லை!

தந்தையின் எண்ணம் ஈடேற முடியாதபடி எனது நான்காவது வயதில் அவர் இவ்வுலகிலிருந்து மறைந்தார். தாயார் மட்டும் அவளுடைய எண்ணத்தைக் கைவிடாமல், என் சகோதரிகளுக்கு இசை கற்பித்த ஆசிரியரிடம் என்னையும் சங்கீதம் பயிலும்படியாகப் பழக்கினார்.

திருநெல்வேலியில் தாமிரவருணி நதியின் கரையில் மீனாட்சிபுரம் என்னும் அழகான கிராமத்தில் எங்கள் வீடு. நதியின் குறுக்கே திருச்செந்தூர் செல்லும் ரயில்வேப் பாலம். அந்தப் பாலத்துக்கு வடக்கில் ஆற்று மணலில் அழகான ஒரு வட்டப் பாறை — 'புடைக்கலாம் பாறை' என்று பெயர்! அங்கே என் நண்பர்களுடன் மாலை நேரங்களில் இசையும் பாட்டுமாக எனது இளமை நாட்கள் கழிந்தன. கல்லூரி நேரம் தவிர மற்றப் பொழுதெல்லாம் சங்கீதத்திலேயே மிதந்து கொண்டிருந்த என் வாழ்க்கைப் படகை வேறு திசையிலே திருப்பி விட்டது ஓர் எதிர்பாராத நிகழ்ச்சி. அதுதான் ரசிகமணி டி. கே. சி.யின் சந்திப்பு. கல்கி, ராஜாஜி இருவருடைய தொடர்பும் ஏற்படுவதற்கு அடிகோலிய சந்திப்பு அது!

மீனாட்சிபுரத்துக்கு மறு கரையில் உள்ளது வண்ணார்பேட்டை! டி. கே. சி. சென்னையில் அறநிலைய ஆணையர் பதவியிலிருந்து ஓய்வு பெற்றுத் தமது சொந்த ஊரான வண்ணார்பேட்டைக்குத் திரும்பியிருந்த சமயம் அது. எங்கள் கல்லூரியில் ஒரு சொற்பொழிவுக்கு வந்தார். அப்போதுதான் அவரை முதன் முதலாகப் பார்த்தேன். என் வாழ்க்கையில் ஒரு பெரிய இலக்கியத் திருப்பத்தை உண்டாக்கிய அந்தச் சந்திப்பு, நீங்காத நினைவாக உள்ளத்தில் நிலைத்து நிற்கிறது. இந்த முதலாவது சந்திப்பைப் பற்றிப் பிற்காலத்தில் டி.கே.சி.யே தமது கடிதம் ஒன்றில் நினைவு கூர்கிறார்! அந்தக் கடிதம் கல்கி பத்திரிகையோடு சம்பந்தப்பட்ட ஒரு கடிதம்.

1944ல் கல்கி தீபாவளி மலர் வெளிவந்ததும் அதில் பிரசுரமாயிருந்த சிறப்பு வண்ணப் படங்களும் அவற்றுக்கு எழுதப்பட்டிருந்த அழகான விளக்கங்களும் எங்களை மிகவும் கவர்ந்தன. விளக்கங்களை எழுதியவர் யார் என்று பெயர் குறிப்பிடாத காரணத்தால் ஓர் ஆராய்ச்சி நடந்தது! எழுத்தின் பாங்கும் நடையும் கொண்டு அது டி.கே.சி.தான் என்று நான் சொன்னேன். ஆனால் என் நண்பர் ஒருவர் இன்னொரு அறிஞரின் பெயரைக் குறிப்பிட்டார். இது பற்றி நான் டி. கே. சி.க்கே எழுதினேன். அதற்கு வந்த பதில் ஒரு நீண்ட கடிதம். அதில் சில பகுதிகளைக் கீழே தருகிறேன்.

திருக்குற்றாலம்
19–10–44

அருமைச் சோமுவுக்கு,

சென்னையில் சுமார் பத்து நாள் (தீபாவளி மலர் சமயம்) இருந்தேன். மோட்டார் டயர்ப் பஞ்சம், பெட்ரோல் பஞ்சம் இவைகளால் அக்கம் பக்கம் போகவில்லை. கடைசி நாள்தான் எலக்காவ காருக்கு டயர் வந்தது. அவிழ்த்து விட்ட கன்றுமாதிரி சென்னையை அப்படியும் இப்படியுமாகச் சுற்றினேன்! இங்கு திரும்பி வந்ததும் உன்னுடைய கடிதம் பார்த்தேன்.

இந்து கலாசாலையில் உன்னை முதன் முதலாகக் கண்டது ஒரு பிரசங்கத்தின்போது. அப்போது நீ பையன் கூட இல்லை. குழந்தைதான். குழந்தை உருவத்தில் முதல் பெஞ்சில் உட்கார்ந்திருந்தாய். நான் ஏதோ பேசி வந்தேன். அவ்வளவையும் ஒன்று விடாமல் கும்மாளி போட்டுக் கும்மாளி போட்டுக் கேட்டுக் கொண்டிருந்தாய். இப்படிக் கேட்கிற மாணவனும் உண்டா என்று அதிசயித்தேன். உன்னைக் கண்டு யார் எவர் என்பதை விசாரிக்க வேண்டும் என்று ஆசையும் இருந்தது. அப்படியே ஓடிவிடாமல் நீயும் எனது வண்டிப் பக்கம் வந்து நின்றாய். நின்றதோடு நிற்கவில்லை. 'கம்பராமாயணத்துக்கு (டி.கே.சி. வீட்டில் நடந்து வந்த வட்டத் தொட்டி வகுப்புகள்) வரலாமா?'

என்றும் கேட்டாய். என்னைத் தூக்கி வாரிப் போடாமல் என்ன செய்யும் அது! சரி, அன்று முதல் இன்று வரை உன்னை நினைத்தாலே எனக்குத் தனியான சந்தோஷம்.

உன்னுடைய கடிதத்தைப் பார்த்ததும் பழைய கும்மாளி முதல் எல்லாம் நினைவுக்கு வந்தன.

தாமரை இலை மேல் நிற்கும் நீர்த் துளிகள் எப்படி ஒன்றோடு ஒன்று கலக்குமோ அப்படி என் உணர்ச்சிகளோடு நீ கலந்துகொள்கிறாய். நீர்த் துளி பூரிப்படைகிறது போல் நம் இதயமும் பூரிப்படைகிறது.

நோக்காஸ் குச்சியில் உள்ள அழகிய தத்துவத்தை நீயும் ரொம்ப அனுபவிக்கிறாய். நீ அனுபவியாமல் வேறு யார் அனுபவிக்க!

படங்களுக்கு எழுதியுள்ள குறிப்பை நான் தான் என்று நீ இனம் கண்டு கொண்டது பற்றி எனக்கு ரொம்ப சந்தோஷம். படங்கள் பெரிய பெரிய விஷயங்களை விளக்க வந்துள்ளன. நண்பர் கல்கி அந்தப் பொறுப்பை என்னிடம் சுமத்தி விட்டார். பாடல்களை எப்படியோ பொறுக்கி விட்டேன். ஆனால் வசனத்தில் விளக்கம் கொடுக்க வேண்டுமே! கஷ்டமாய்த்தான் இருந்தது. நீயோ படத்தையும் விளக்கத்தையும் அபாரமாய் அனுபவித்திருக்கிறாய். என்னை இனம் கண்டுகொண்டதில் உண்டான எக்களிப்பை அழகாய் எழுதியிருக்கிறாய். கண்ணும் பொத்தி விளையாட்டில் கதவு இடுக்கில் பதுங்கியிருந்த ஆசாமியைக் கண்டுகொள்ளும் குழந்தைக்குக் கூட அவ்வளவு எக்களிப்பு ஏற்படாது!

ரொம்ப ரொம்ப திருப்தி.

இவ்வளவு நீண்ட கடிதம் யாருக்கு என்று நடராஜன் (டி.கே.சி.யின் பேரன். அப்போது சிறுவன்) கேட்கிறான். சோமுவுக்கு என்றேன். அப்படியானால் சரி என்கிறான்!

டி.கே.சி.

---

# கண்களும் கவிதைகளும்

## பரிசுப்போட்டி முடிவு

கண்களையும் கண்களைப் பற்றிய கவிதைகளையும் சரியாக இணைத்துக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புமாறு நாங்கள் கேட்டதற்கு இவ்வளவு உற்சாகமான ஆதரவு வாசகர்களிடம் இருக்கும் என்று நாங்கள் எதிர்பார்க்கவில்லை. குன்றுகக் குவிந்த கூப்பன்களைப் பரிசீலித்து ஆறும் சரி, நாலு சரி, மூன்று சரி, இரண்டு சரி, ஒன்று சரி, அனைத்தும் தவறு என்று தனித் தனியே பிரிப்பதற்குள் உன்பாடு, என்பாடு என்றாகிவிட்டது. இருந்தாலும் கல்கி ஆசிரியர் குழுவினர் தீபாவளி மலர் வேலைகளுக்கு இடையிலும் இதனைச் சிரத்தையாக இரவு எட்டு மணி ஒன்பது மணி வரை கூட இருந்து செய்து முடித்தனர்.

இப்படிப் பிரித்த பின் பார்த்தால் முழுவதும் சரியாக எழுதியவர்களே ஏழு பேர் இருந்தனர்.

நாலு சரியாக எழுதியவர்கள் நூற்றுக் கணக்கிலும் மூன்று, இரண்டு சரியாக எழுதியவர்கள் அதை விடப் பன்மடங்கு அதிகமாகவும் இருந்தனர்.

ஒன்றுக்கு மேற்பட்ட சரியான விடைகள் வந்தால் பரிசுப் பண்டத்தின் மதிப்பைக் கணக்கிட்டு அத்தொகை பகிர்ந்தளிக்கப்படும் என்று அறிவித்திருந்தோம். ஆனால் அவ்விதம் பகிர்ந்தளித்தால் இரண்டாம் பரிசாகத் தரப்படும் தொகை மிகக் குறைவாக; ஆறுதல் பரிசான கல்கி தீபாவளி மலரின் விலையை விடவும் (ரூ. 20) குறைவாகப் போய் விடுகிறது.

எனவே ரயில் ராதிகா அவர்களை அழைத்து வந்து முதல், இரண்டாம், மூன்றும் பரிசுக்குரியவர்களைத் தனித் தனியே சீட்டுக் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கக் கோரினோம். அதன்படி முழுவதும் சரியாக எழுதியவர்களுள் ஒருவர் நான்கு சரியாக எழுதியவர்களுள் ஒருவர், மூன்று சரியாக எழுதியவர்களுள் ஒருவர் என்று ரயில் ராதிகா அதிர்ஷ்டசாலிகளைச் சீட்டுக் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுத்தார்.

பின்னர், இரண்டு சரியாக எழுதியவர்களுள் இருநூறு பேர்களையும் அதே சீட்டுக் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுத்தார்.

**முதல் பரிசு பிரஸ்டீஜ் பிரஷர் குக்கர் பெறுபவர்:**

டபிள்யூ. மல்லிகா,
எண் 4, லால் முகம்மது தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை 600005.

**இரண்டாம் பரிசு: வி. ஐ. பி. பிரீப் கேஸ் பெறுபவர்:**

இரா. வசந்தகுமாரி
ஈ 3-425எப், கைலாசபுரம்
பாய்லர் தொழிற்சாலை டவுன்ஷிப்,
திருச்சி-620014.

**மூன்றும் பரிசு: அலாரம் கடிகாரம் பெறுபவர்:**

அர. குப்புசாமி,
S/o. பி. என். ரங்கசாமி
பச்சாபாளையம், காளம்பாளையம் போஸ்டு
கோயமுத்தூர்-641010.

பரிசு பெற்ற அனைவருக்கும் வாழ்த்துக்களையும், பரிசு பெற்றவர்களைத் தேர்ந்தெடுத்த ரயில் ராதிகாவுக்குக் கல்கி வாசகர்கள் சார்பில் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறோம். பரிசுகளை, சமீபத்திய ஆளுனரின் அவசரச் சட்டம் காரணமாக அனுப்ப முடியாது இருக்கிறது. இதனால் பரிசு பெற்றோருக்கு ஏற்படக் கூடிய ஏமாற்றத்தை விரைவில் தவிர்க்க முடியும் என்று நம்பிக் கொண்டிருக்கிறோம். -ஆசிரியர்.

# முற்றுப் பெறாத பாக்கியங்கள்



மதனா மிருத்தியுஞ்சயன்

## அத்தியாயம் 1

"சுநீதா..."

..........

"ஹேய் சுநீதா..."

சுநீதா பேசாமல் இருந்தாள்.

"சுநீதா... உனக்கு என்னடா கோவம்?" விநோத் இதமாகக் கேட்டான்.

இதற்கும் சுநீதா பதிலளிக்கவில்லை.

"நீ மட்டும் இப்போ வாய் திறந்து பதில் சொல்லலேன்னு...." வாக்கியத்தை விநோத் முடிக்கு முன்—

"என்ன செஞ்சுடுவீங்களாம்... கம் ஆன்.. டு இட்" சுநீதா பொரிந்தாள். கோபத்தில் சிவந்த அந்த எழில் முகத்தில் ஒரு புது அழகு!

"ஹேய்...ஐ ஹாவ் மேட் இட்....உன்னைப் பேச வைச்சுட்டேன்... நீ மட்டும் பேசலேன்னு ஐ உட் ஹேவ் டன் தட்... நிச்சயம் செய்திருப்பேன்..."

"என்னமோ காஞ்சீபுரம் பிச்சைக்காரன் மாதிரி பயமுறுத்திறீங்களே..."

"அதென்ன காஞ்சீபுரம்... கம் ஆன் டெல் மீ..." விநோத் போட் விளிம்பில் சாய்ந்து கொண்டு ஒரு பில்டர் வில்லைப் பற்ற வைத்துக் கொண்டான்.

"ஒரு பிச்சைக்காரன் வழக்கமா ஒரு வீட்டுக்குப் பிச்சைக்குப் போவானும். தவறாமச் சாப்பாடு போடற அந்த வீட்டுக்காரி ஒரு நாள் ஒண்ணுமில்லேன்னுளாம். உடனே பிச்சைக்காரனுக்குக் கோபம் வந்து, 'நீ ஒண்டி இன்னிக்குச் சாப்பாடு போடலேன்னு போன மாசம் காஞ்சீபுரத்திலே செஞ்ச மாதிரி இங்கேயும் செஞ்சுடுவேன், ஜாக்கிரதை' என்றானும். வீட்டில் ஆண்பிள்ளை இல்லாத நிலையில் அந்தப் பெண்மணிக்குப் பயம் வந்து விட்டது. 'கொஞ்சம் உட்காருப்பா, நான் சீக்கிரமாச் சமைச்சுப் போட்டுடறேன்' என்று சொல்லிச் சாதம் வடிச்சுப் போட்டாளாம். அவனும் வயிறாரச் சாப்பிட்டதும், அந்தப் பெண்மணி, 'என்டாப்பா! காஞ்சீபுரத்திலே செஞ்ச மாதிரின்னியே அங்கே என்ன செஞ்சே?' என்று கேட்டாளாம். அதற்கு அந்தப் பிச்சைக்காரன், 'சாப்பாடு இல்லேன்னதும் பேசாமெ எழுந்து போயிட்டேன்' என்று சொல்லிப் போனானும்... அது மாதிரி நீங்களும், நான் பேசலேன்னு அதைச் செஞ்சுடுவேன் இதைச் செஞ்சுடுவே..." சுநீதா வாக்கியத்தை முடிக்கு முன்,

விநோத் மின்னலெனத் தனது இடக் கையை அவளது கழுத்தில் மாலையாய்ப் போட்டுத் தன்பால் இழுத்து வலது கையால் முகத்தைத் திருப்பி அவளது பூவிதழ்களில் தனது இதழ்களை அழுத்தமாகப் பதித்து...

அந்தக் காட்சியைக் கண்டு வெட்கப்பட்டு வானம் கூடச் சிவந்தது.

சிலிர்த்தபடி சுநீதா தன்னை விடுவித்துக் கொண்டாள்.

"இப்போ சொல்லு, நான் காஞ்சீபுரமா இல்லே காம்தார் நகரா?"

"யூ மிஸ்சிவஸ்... வேண்டாம்பா இனிமே சத்தியமா உங்களைக் காஞ்சீபுரம்னு சொல்ல மாட்டேன்..."

"ஆமாம்... இப்போ சொல்லு... என் மேலே என்ன கோபம் சுநீத்?"

"நாளைக்கு எனக்கு பர்த்டே, ரெண்டு பேரும் 'நாவல்டீ' போகலாம், திசர்ஸ் கூடப் பண்ணியாச்சுன்னு நான் சொல்லியிருக்கச்சே, எல்லாத்தையும் மறந்துட்டுத் திடீர்னு இன்னிக்கு நைட் ப்ளேன்லே பெங்களூர் போகணும்னு சொன்னு..."

"ஐ ஆம் சாரி மை டியர் விட்டில் ஃபெல்லோ... ஐ டு ஃபீல் இட்... பட் நான் போயே ஆகணும்... நம்ப கிராமங்கள்லே ஒரு பழமொழி சொல்லுவாங்களே... பேய்க்கு வாழ்க்கைப்பட்டா அது சொல்ற படி ஆடணும்னு அது மாதிரி உன்னோட காதலன்... எதிர்காலக் கணவன்... ஒரு டிடெக்டிவ்... அவனோட உத்தியோகத்துக்கு நேரம், காலம், பர்த்டே விசேஷம்னு எந்த விதமான சலுகைகளும் கிடையாது. திருடர்களும், கொலைகாரர்களும் நாள் நட்சத்திரம் பார்த்துக் குற்றம் செய்றது இல்லே.. அவங்களைக் கண்டு பிடிச்சுச் சட்டத்தை நிலைநாட்ட வேண்டிய நிலையிலே இருக்கிற எங்க நிலையும் அதுவேதான்..."

"ஸோ யூ கான்ட் அவாய்ட் இட்...."

"ஒரு டைமண்ட் ராப்பரி கேங் அங்கே இருக்கறதா தகவல்... ஐ ஹேவ் டு கோ..."

சுநீதா பதில் பேசவில்லை.

"சுநீத் எனக்கொரு ஐடியா!" கடற்கரை மணலை அளைந்து கொண்டிருந்த சுநீதாவின் வலது கையை மிருதுவாக எடுத்துத் தனது கீழுதட்டால் முத்தமிட்டு,

பின்னர் தனது இடது கையால் அதைப் பூ போல் வருடியபடி வினோத் கேட்டான்.

சுந்தாவினுள் பரவச நிலை.

''ம்ம்...,சொல்றுங்க பேய்க்கு வாழ்க்கைப்படணும்னு ஆயிடுத்து... அது சொல்ற மாதிரி ஆடித்தானே....''

''வேறே வழியில்லாமக் கேட்கணும்னு நீ க்பில் பண்றதாணு நான் சொல்லலே...'' வினோத் இடக்குச் செய்தான்.

''அப்பப்பா... என்னமா கோபம் வரது!'' என்று சொன்னபடி அவனது தோளில் தனது முகத்தைச் சுந்தா சாய்த்துக் கொண்டாள்.

''சுந்த்! டியர்... நானே பார்த்டே... டேட் ஆஃப் பர்த் படி, நட்சத்திரப்படி உனக்கு பதினைஞ்சு நாள் கழிச்சுத்தானே பர்த்டே வரது? வீ வில் செலபரேட் தட் டே!.. என்னடா சொல்றே...?''

''இப்போ பெங்களூர், அப்போ பாம்பேன்னு கிளம்பிடுவீங்க...''

''நோ... ஐ வோண்ட் கோ... அப்படியே போறதானுக்கூட உன்னையும் கூட்டிண்டு தான்....''

''ட்ரீம் பண்ணிண்டே இருங்கோ... நான் வரமாட்டேன்.''

''சும்மா சொன்னேன். நான் நிச்சயமா சுந்தை விட்டுட்டுப் போக மாட்டேன்.''

''பிராமிஸ்...''

''பிராமிஸ்ட்.''

''ஆ... கை வலிக்கிறது. பிராமிஸ் பண்றேன்னு இப்'படித்தான் கையை அமுக்கறதா?''

''சுந்த்... எனக்கு பிளேனுக்கு நாழியாகிறது. வீட்டில் உன்னை டிராப் பண்ணிட்டு நான் கிளம்பறேன்... உங்கப்பா வீட்டிலே இருப்பாரா?''

''அப்பா என்னிக்கு ஒழுங்கா வந்தார்? எப்பப் பார்த்தாலும் பிஸினெஸ் பிஸி வெஸ்னு பிளேன்லேதான் பறந்துண்டு இருக்கார்.''

''ஐ வுட் லைக் டு மீட் ஹிம்...''

''ஓ ஷ்யூர்... ஆமா நீங்க சாடர்டே ரிடர்ன் ஆயிடுவீங்க இல்லையா...ரிடர்ன் ஆனதும் ரெண்டு பேரும் சந்திக்கிறதுக்கு ஏற்பாடு பண்ணறேன். நம்ப லவ் பற்றி நீங்கதான் அவர்கிட்டே சொல்லிக் கல்யாணத்துக்கு அனுமதி வாங்கியாகணும்...''

''ஒருவேளை உங்கப்பா ஒத்துக்கலேன்னா?''

''ரெண்டு பேரும் ரிஜிஸ்டர் மேரேஜ் செஞ்சுக்க வேண்டியதுதான்!''

''சுந்த்.. அந்த அளவுக்கு உனக்குத் தைரியம் இருக்கா?''

''வாட் டு யூ திங்க் ஆஃப் மீ... நான் ஒரு டிடெக்டிவ்வின் எதிர்கால மனைவி.''

இருவரும் கலகலவென்று சிரித்தனர். கை கோத்தபடி மணல் கரை நோக்கி நடந்தனர்.

''வினோத்... இட் ஈஸ் ஆல்ரெடி கெட்டிங் லேட் ஃபார் யூ... என்னை பஸ்ஸில் ஏத்திட்டு யூ கேரியான்...'' என்றாள் சுந்தா.

முதலில் மறுத்தான். பிறகு ஒப்புக் கொண்டான்.

சுந்தாவை பஸ்ஸில் ஏற்றியதும் அதுவரையில் அடங்கிக் கிடந்த அவசரம் அவனுடைய நரம்புகளில் பளீரென மின்ன விட, காம்தார் நகரை நோக்கிப் பறக்கலானான்.

''ஹலோ...''

''ஹலோ....''

''ஈஸ் இட் டு வெய்ட் டு செவன் ஃபைவ் த்ரீ, செட்னு அண்ட் கோ?''

''யெஸ்...ப்ளீஸ்...''

''நீல் கமல் இருக்காங்களா?''

''ஐ ஆம் நீல் கமல்... நீல் கமல்தான் பேசறேன்...''

''யுவர் கோட் நம்பர் ப்ளீஸ்...''

''ப்ளூ செவன்டி செவன்...''

''ஹாய் நீல்... நான் ஜோஸ் பேசறேன்.''

''அப்பவே புரிஞ்சுது... இருந்தாலும் நம்ப 'பாஸ்' கட்டளைப்படி 'கோட் நம்பர்' கேட்டுப் பதில் சொன்னப்பறம்தானே பேச முடியும்... தப்பிப் போய் ஜோஸான்னு நான் கேட்டுட்டேன்னு நீயே கூட என்னை 'பாஸ்' கிட்டேக் காட்டிக் கொடுத்தாலும் கொடுத்திடுவே...''

''நீல்... ரொம்ப அர்ஜெண்டான விஷயம்... பாஸ் உன்னை உடனே காண்டாக்ட் செய்யச் சொன்னார்...''

''என்ன விஷயம் ஜோஸ்... இன்னிக்கு என்னாலே ஒண்ணும் முடியாது...ரொம்பவும் டயர்டா இருக்கு...''

''போன்லே மட்டெய்ல் சொல்ல முடியாது. நீ உடனே அதான் சௌதா வாசல் கிட்டே வா.... நான் காத்திருக்கிறேன்.''

''உடனே திரும்பிட முடியுமா?''

''ஊஹூம்.. சொல்லிட்டு வந்துடு.''



''மோதலாளி கத்துவானே...''

''அவன் கெடக்கிறான்... பாஸ் உத்தரவு, ஜோஸ் போன் பண்ணினான்னு சொல்லு...; ஏதாவது அட்டவணை படிச்சான்னு என் கிட்டே வந்து சொல்லு. பாஸ் கிட்டே ஒரு வார்த்தை போட்டா மடையனை பீஸ் பிஸாக்கிடுவார்...''

''ஐயய்யோ... அதெல்லாம் அனுவசியமா வேண்டாம்....''

நீல் போனை வைத்தான்.

சுற்று முற்றும் பார்த்தான்.

எவரும் கவனிக்கவில்லை.

முதலாளி அறைக்குப் போனான். ஆள் இல்லை. லீவு லெட்டர் எழுதி வைத்துவிட்டுக் கிளம்பினான்.

நீல் கமல்.






பெயரைப் போலவே அழகான முகம். அதைவிட ஒரு படி அழகான உடம்பு. 36—24—38.

முப்பத்தாறின் முன் பக்கமும் முப்பத்தெட்டின் பின் பக்கமும் பக்கவாட்டில் காணும்போது எப்படிப்பட்ட ஆணையும் எகிற அடித்துவிடும்.

எகிறி ஏமாந்து அழிந்தவர்கள் எத்தனையோ புள்ளிகள். அவள்து ஜீவனத்தின் மூலதனமே அதுதான்.

முகத்தில் மயங்கியவர்கள்
பேச்சில் மயங்கியவர்கள்
உடம்பில் மயங்கியவர்கள்
—இப்படி ரகவாரியாக அவளது இரைகளைப் பிரிக்கலாம்.

ஆரம்பத்தில் 'த்ரில்'லாகத்தான் அவளுக்கும் இருந்தது. நாளாவட்டத்தில் வெறுப்புடன், தான் பின்னிக் கிடக்கும் 'கோஷ்டிக்காக'க் கட்டாயத்தில் செய்தாள்.

கார்ப்பரேஷனிலிருந்து திருபதங்கா ரோடு வழியாக விதான் சௌதாவை நோக்கி நடக்கலானாள்.

வழி முழுக்க அவள் உடம்பை மொய்க்கும் ஆண் விழிகள்.

நடக்கலானாள்.

ஜோஸ் காத்திருந்தான்.

அவனும் மேலும் கீழுமாக ஒரு முறை மொய்த்தான்.

''என்ன அப்படிப் பார்க்கிறே?'' முகம் சுளித்தாள்.

''நீ... நீ இன்னிக்குப் படா ஜோரா இருக்கிறே... இவ்வளவு பிரம்மாதமா டிரஸ் பண்ணிக்கிட்டிருக்கிறப்பவே இப்படி பிரமிக்க வைக்க முடியும்னு...''

''நீ அசிங்கமாப் பேசாதே. மொதல்லே பாஸ் சொன்ன விஷயத்தைச் சொல்லு.'' பாஸின் பெயரைச் சொல்லவும் ஜோஸின் முகம் சட்டென்று மாறியது.

''இன்னிக்கு நைட் உனக்கு வேலேஇருக்கு.''

''ஜோஸ் நான்தான் சொன்னேனே.... இன்னிக்கு என்னாலே ஒண்ணுமே முடியாது!''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. மெட்ராஸ்லேயிருந்து ஒரு வைர வியாபாரி பிஸினெஸ் விஷயமா வந்திருக்கான். 'செவன் ஹெவன்'ஹோட்டல்லே நாலாவது மாடிலே நாற்றிப்பத்தாம் நம்பர் ரூம்லே தங்கியிருக்கான். அவனுக்குக் 'கம்பெனி' கொடுக்க ஆள் வேணும்னு பாஸுக்கு நியூஸ் வந்தது. 'டேய் ஜோஸ், இந்த வேலேக்கு நீலகமல்தான் சரி. அவளை ராத்திரி ஏழு மணிக்கு அவன் ரூம்லே கொண்டு போய் விடு. எப்படியாவது அவனைத் தாஜா பண்ணி 'நைட்' ஷோவுக்குக் கூட்டிண்டு போகச் சொல்லு. சங்கம் தியேட்டர்லே ரிசர்வ் பண்ணிட்டேன். கார் தயாரா இருக்கும்னு எனக்கு பாஸ் போன்லே சொன்னார். உடனே உன்னைக் காண்டாக்ட் செஞ்சேன்.''

''படம் முடிஞ்சதும் கூட ரூமுக்கு வான்னு கம்பெல் பண்ணுவானே... என்னாலே இன்னிக்கு முடியாது.''

''தப்பிச்சுக்கிறது உன் சாமர்த்தியம்.''

''ஒங்களுக்கு என்ன! உங்க காரியம்தான் முக்கியம். நான் எப்படிப் போனா என்ன? சே! இது என்ன பொழப்பு... வர வர எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கலே. பேசாமே எல்லாத்துக்கும் தலே முழுகிட்டுக் கிராமத்துக்குப் போயிடலாம் போல இருக்கு!''

''என்ன இன்னிக்கு என்னென்னவோ பேசறே! பாஸ் காதிலே விழுந்தா அவ்வளவுதான்....''

''என்ன! பண்ணுவார்? மிஞ்சிப் போனா என்னையும் கொலே பண்ணுவார். அதானே... நான் ரெடி!''

---

தர்மசங்கடம்

தம்பு



''சீச்சீ! பைத்தியம் மாதிரிபேசாதே உன்னை நம்பிக் கிராமத்திலே ஒரு குடும்பமே இருக்கு. என்ன பண்றது? சின்ன வயசுலே தடம் மாறிட்டா அப்புறமா லையன்லே வரது கஷ்டம்தான்... ஒண்ணும் கவலைப் படாதே! சினிமா முடிஞ்சதும் அவன் கிட்ட இருந்து வெட்டிக்கிறதுக்கு நான் வழி பண்றேன். அது சினிமா முடியற மட்டும் அவனைத் தியேட்டர்லே எங்கேஜ் பண்ண வேண்டியது ஒன் வேலை.. கோட்டை விட்டுடாதே! ராத்திரி எட்டு மணிக்கு வீட்டுக்கு வந்து ஒன்னை செவன் ஹெவனுக்குக் கூட்டிப் போறேன்...''

நீல் தலையாட்டினாள்.

ஜோஸ் போய்விட்டான்.

தன் வீடு இருக்கும் சிவாஜி நகர் நோக்கி நடக்கலானாள்.

மெஜஸ்டிக் சர்க்கிள்.

சங்கம் தியேட்டர்.

பழைய ஆங்கிலப் படம். Viva Zapata.

கௌபாய் உடையில் மார்லன் பிராண்டோவும் அன்டினி க்வினும் குதிரைகளில் பறந்து கொண்டிருந்தனர்.

'பாஸ்' உத்தரவுப்படி வைர வியாபாரி மதன்லாலைத் தன்னுடன் சினிமாவுக்கு அழைத்து வர முடிந்தது குறித்து நீல் கமலுக்குத் திருப்தி.

அதைவிட அதிகமாக இன்னொரு திருப்தி அவனுக்கு.

மதன்லால் அவனுடைய உடம்புக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்காமல் மனிதாபிமானத்துடன் நடந்து கொண்டது அவனுக்கு இதமாக இருந்தது. இவனையே தொத்திக் கொண்டு இந்தக் கூட்டத்தினின்று தப்பினால் என்ன என்று கூட அவனுள் யோசனை.

வைர வியாபாரி மதன்லால் போர்வையில் வந்திருந்த வினோத்திற்கும் திட்டமிட்டபடி எல்லாம் நடப்பதில் மகிழ்ச்சி.

தன்னை உண்மையான வைர வியாபாரி என்று அந்தக் கூட்டம் நம்பி விட்டதில் அவனுக்குத் திருப்தி. நீல் கமல் அவனுடைய அறைக்குள் நுழைந்த கணமே, ரகசியப் போலீஸ் கொடுத்திருந்த போட்டோக்களில் அவனுடையதும் இருக்கிறது என்று அவனுக்குப் புரிந்து விட்டது. இவனை ஏணியாகக் கொண்டு மற்றவர்களையும் பிடிக்க வேண்டும் என்று திட்டமிட்டான்.

''என்னங்க படம் பிடிக்கலையா?'' நீல் கமல் அவனைக் கேட்டான்.

''ஓ நல்லா இருக்கே...''

திடீரென்று அவனுடைய பாக்கெட்டிலிருந்த ஒயர்லெஸ் கருவி மிக மெலிதாகச் சத்தமிட ஆரம்பித்தது.

உஷாரானான்.

அவன் உடனடியாகக் கிளம்பி செவன் ஹெவன் ஹோட்டலுக்குத் தன் அறைக்குச் சென்றாக வேண்டிய சிக்னல் அது.

''என்னங்க விஷயம்...? ஒண்ணும் பேச மாட்டேங்றீங்க?'' நீல் கேட்டாள்.

''நான் அர்ஜெண்ட் வேலையா உடனே போகணும்.... இந்தா நூறு ரூபா... நீ நாளைக்கு மத்தியானம் ரூமுக்கு வா... உன்கிட்ட நிறையப் பேசணும்...'' வினோத் கிளம்பினான்.

''இதோ பாருங்க... நீங்க எனக்குன்னு படம் பார்க்கக் கூடாதா? போயிடாதீங்க... ஒரு முக்கியமான விஷயம்... போகாதீங்க... இப்ப நீங்க போனீங்கன்னு....''

அவள் வார்த்தைகளை லட்சியம் செய்யாமல் கிளம்பி, வெளிவந்து தியேட்டர் வாசலில் தனக்காக போலீஸ் இலாகா ஒதுக்கியிருந்த காரில் ஏறிக் கொண்டு 'செவன் ஹெவனை' நோக்கிப் பறக்கலானான்.

ஆனால் நடந்ததென்னவோ வேறாக இருந்தது.

இவனது அம்பாஸிடர் ரேஸ் கோர்ஸ் ரோட்டில் போய்க் கொண்டிருந்தபோது—

(தொடரும்)

# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

❁ ராஜ்மோகன் காந்தி ❁

அலகாபாத் ஒப்பந்தத்தை ''பூரண சக வாழ்வு சகாப்தத்தின் ஆரம்ப கட்டம்'' என்று வர்ணித்த ஸி. ஆர். 'மகாத்மாவின் உப வாசம்தான், குறிப்பிட்ட சில சமூகத்தின ரின் நலனை மட்டுமே கருத்தில் கொள்வோ ரின் மனமாற்றத்துக்குக் காரணம்' என்று எண்ணினார்.

அலகாபாத் மகாநாடு ஒரு திருப்பு முனை என்று கருதியவர் அவர் மட்டுமல்ல. ராஜேந் திரப் பிரசாத்தும் இந்த ஒப்பந்தம் உண்மை யான தேசியத்துக்கும் சுதந்திரத்துக்கும் அஸ்திவாரமிடுவதாக எண்ணினார். முஸ்லிம் களில் மிகப் பெரும்பான்மையினர் இந்த ஒப்பந்தத்தை ஏற்றுக் கொள்வார்கள் என்று தாம் எதிர்பார்ப்பதாக ஷௌகத் அலி சொன்னார். 'இந்திய அரசியலில் இது ஒரு மிகப் பெரிய சாதனை' என்று ஆஸாத் கருத்துத் தெரிவித்தார்.

ஆனால் இவையெல்லாம் அவசரப்பட்டு அடைந்த குதூகலமாகவே முடிந்தன. ஹிந்து மகாசபை மட்டுமின்றி முக்கியமான முஸ்லிம் அமைப்புக்களும் அலகாபாத் ஒப் பந்தத்தை நிராகரித்தன. ஷௌகத் அலி யாலும் ஆஸாத்தினாலும் முஸ்லிம் ஆதரவை நீடித்து நிலைக்கச் செய்ய முடியவில்லை. மாள வியாவினால் ஹிந்து மகா சபை மீது தமது செல்வாக்கைப் பிரயோகிக்க முடியவில்லை. ''அவரே இதில் ஆர்வம் காட்டவில்லை; அது தான் காரணம்'' என்பது ஸி. ஆரின் கருத்து.

மிகுந்த ஏமாற்றத்துக்குள்ளானார் ஸி.ஆர். பின்னால் அவர், ''அலகாபாத் ஒப்பந்தம் நிராகரிக்கப்பட்டதானது இந்திய அரசிய லில் மிகப் பெரிய துக்க சம்பவம்'' என வர்ணித்தார். ஆனால் ஒற்றுமை ஏற்பட மனப்பூர்வமான முயற்சி ஆரம்பத்திலிருந்தே இருக்கவில்லை என்பதுதான் உண்மை. அலகா பாத் பேரங்களும் எரவாடா பேச்சு வார்த் தைகளும் ஒன்றாகி விட முடியாது. காந்தியின் உண்ணாவிரதம் என்ற உணர்ச்சி மிக்க வற் புறுத்தல் அலகாபாத்தில் இருக்கவில்லை என்பது ஒன்று.

இன்னொரு வித்தியாசமும் இருந்தது: எரவாடாவில் ஜாதி ஹிந்துக்கள் பிராயச் சித்தம் பண்ண அவசியமிருக்கிறது என்பதை உணர்ந்திருந்தனர். ஹிந்து — முஸ்லிம் விஷயத்தில் இரு தரப்பினருமே அப்படி ஓர் அவசியம் இருப்பதாக உணரவில்லை. எனவே, ஹிந்துக்களும் சரி, முஸ்லிம்களும் சரி வேண்டாவெறுப்பாகத்தான் விட்டுக்கொடுத் தார்கள். அந்த நிலையிலிருந்தும் தங்கள் தரப் பில் தீவிரவாதிகள் ஆட்சேபித்தபோது பின் வாங்கினர். ஒற்றுமை ஏற்படும் என நம்பியதே தவறு என்றுதான் இன்றைக்குப் பின்னோக்கி எண்ணிப் பார்க்கையில் தோன்றுகிறது.

அலகாபாத் மகாநாடு சற்றே கவலைத் தைத் திருப்பினாலும், தீண்டாமையை எதிர்த்து நடத்தி வந்த போராட்டமே மகாத் மாவுக்குப் பிரதானமான ஒன்றாக இப்போது இருந்தது. எனவே ஸி. ஆருக்கும் இதுவே முக்கியமானதாகி விட்டது.

தாழ்த்தப்பட்டோருக்குக் கோயிலுக்குள் நுழையும் உரிமை பெற்றுத் தருவதிலேயே இப்போது போராட்டம் மையம் பட்டிருந் தது. எரவாடா உபவாசத்தின்போது நடந்த ஹிந்துக்கள் மகாநாடு சமூக ரீதியிலும் மத அடிப்படையிலும் சம அந்தஸ்து தாழ்த்தப் பட்டோருக்கு உண்டு; ஆலயப் பிரவேசத் துக்கு அவர்கள் அனுமதிக்கப்படுவர் என உத்தரவாதம் அளித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றி யிருந்தது. இந்த உரிமைகளை நாடு சுதந்திரம் பெறுமுன்னரே தாழ்த்தப் பட்டோர் அடையவில்லை எனில் சுதந்திரம் பெற்றதும் முதல் காரியங்களில் ஒன்றாக நாடாளுமன்றம் இதற்குச் சட்டமியற்றும். மகாத்மா உபவாசத்தை முறித்ததும் சொன் னார்:

''இந்தத் தீர்மானம் செயல்ப் படுத்தப் படு வதற்கும் எரவாடா ஒப்பந்தம் ஜாதி ஹிந்துக் களால் அமல் படுத்தப்படுவதற்கும் நான் என்னையே பணயமாக்கிக் கொள்கிறேன்.''

செப்டம்பரில் சென்னையில் இரு கோயில்கள் ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்பட்ட போதிலும் பொதுவாகத் தென்னகம் இதற்கு எதிர்ப்புக் காட்டி வரவே செய்தது. எவ் வளவோ முயன்றும் குருவாயூர் கோயில் கதவுகள் ஹரிஜனங்களுக்குத் திறக்கப்பட வில்லை.

குருவாயூரைச் சுற்றி யிருந்த ஜாதி ஹிந் துக்கள் தயங்குகிறற்போல் தெரிந்தது. உள்ளூர் சீர்திருத்தவாதியான கேளப்பன் இதற்காக உண்ணாவிரதம் இருக்க எண்ணி னார். மகாத்மா இந்த நடவடிக்கையை ஒத்திப் போடுமாறு கேட்டுக் கொண்டார். சில காலத்துக்குப் பிறகு இந்த வைத்தியம் தான் தேவைப்படும் என்று தோன்றினால் அவருடன் சேர்ந்து தாமும் உண்ணாவிரதம் இருப்பதாகச் சொன்னார்.



அந்த வட்டாரத்தில் ஜாதி ஹிந்துக்கள் தங்கள் நிலையைத் தெளிவு படுத்தினால் ஒழிய ஜனவரியில் மகாத்மா உண்ணாவிரதத்தைத் தொடங்கி விடுவார் என்றே தோன்றியது. டிசம்பர் தொடக்கத்தில் ஸி. ஆர். போராட்டக் களத்தில் இருந்தார். உப்பங்கழிகள் நிறைந்த அந்தத் தாலுக்காவில் சராசரி பயண வேகம் மணிக்கு இரண்டு மைல்தான். இருப்பினும் இப்போது காங்கிரஸ் அக்ராசனர் போராட்டக் களமாக மாறியிருந்த அந்த மலையாளப் பகுதியில் இயக்க சக்தியையும் மத சம்பந்தப்பட்டதான தமது கோரிக்கைக்குப் பிரமாதமான நல்லாதரவையும் கண்டார்.

கோயிலைச் சுற்றியுள்ள ஜாதி ஹிந்துக்களில் குழந்தைகள் நீங்கலாகக் கிட்டத்தட்ட 28,000 மக்களுடைய விருப்பத்தைக் கூடியவரை சரியானபடி கணிப்பதுதான் ஸி. ஆரின் முக்கிய பணி. காந்திஜி உபவாசத்தை மேற்கொள்ள எண்ணியிருந்த தன் விளைவாக உருவாகியுள்ள சந்தர்ப்பச் சூழ்நிலை, தீண்டாமைப் பிரச்னை ஆகியவற்றில் தமது முழுக் கவனத்தையும் ஸி. ஆர். செலுத்த வேண்டியிருந்தது. எனவே காங்கிரஸ் அக்ராசனர் பதவியை அவர் விட்டு விட்டார். அதனை ராஜேந்திர பிரசாத்திடம் ஒப்படைத்து விட்டார்.

சம்பிரதாயப்படி கோயிலின் தர்மகர்த்தா பொறுப்பை வகிப்பவர் கோழிக்கோடு ஜமீன்தார். ஓராண்டுக்கு முன்பு, தாம் இறப்பதற்குச் சில காலம் முன்னால் அன்றைய ஜமீன்தார் சென்னை கவர்னரிடம், 'விக்கிரக வழிபாட்டை ஒழிக்க நினைப்பவர்களின் கரங்களில் கோயில் சிக்கிவிடாமல் தடுக்க வேண்டும்' என்று கேட்டுக்கொண்டிருந்தார்.

அரசுக்கு அவரிடமும், அவருக்குப்பின் பதவி வகித்தவரிடமும் அனுதாபம் இருந்தது. 'ஸி. ஆரின் மேடைப் பிரசங்கங்கள் பொது ஜன அபிப்பிராயத்தை ஆலயப் பிரவேசத்துக்குச் சாதகமாக மாற்றி வருகின்றன' என்று கலெக்டர் அறிக்கை அனுப்பி இருந்தும், அரசு, சீர்திருத்தவாதிகள் அபிப்பிராய வாக்கெடுப்பில் தோல்வி காண்பார்கள் என்றே நம்பியது. இருப்பினும் கலெக்டர் ரஸ்ஸல் முழுக்க முழுக்க நடுநிலையாளராகவே விளங்கினர். தாம் பார்த்தவரை அபிப்பிராய வாக்கெடுப்பு நியாயமான முறையிலேயே நடத்தப்படுவதாக அவர் சென்னைக்குத் தெரிவித்தார். தவறான முறைகள் கையாளப்படுவதாக உறுதியான குற்றச்சாட்டுக்கள் எதுவும் இல்லை.

வோட்டுக்கள் டிசம்பர் 24ந் தேதி நள்ளிரவில் அட்டவணையில் குறிக்கப்பட்ட போது, ஐம்பத்தாறு சதவிகிதம் ஜாதி ஹிந்துக்கள் ஹரிஜன ஆலயப் பிரவேசத்தை ஆதரித்ததாக அது உணர்த்தியது. ஒன்பது சத விகிதத்தினர் எதிர்த்தனர். எட்டு சதவிகிதத்தினர் நடுநிலை வகித்தனர். இருபத்தேழு சதவிகிதத்தினர் ஒன்றுமே கூறவில்லை. சீர்திருத்தத்துக்கு மக்களின் ஒப்புதலை இது தெளிவாக உணர்த்தியது. டிசம்பர் 29ம் தேதி எரவாடாவில் இரு முறை காந்தியைச் சந்தித்தார் ஸி. ஆர். கேளப்பனும் பக்க பலமாக நிற்க, அவர் காந்தியை வற்புறுத்தி உண்ணாவிரதத்தைக் கைவிடச்செய்வதில் வெற்றி கண்டார். இருப்பினும் கோயில் கதவுகள் திறக்கவில்லை.

ஜமீன்தார், ஆலயம் தனிப்பட்ட சொத்து என்றும் பொதுமக்கள் அபிப்பிராயத்தை அது ஏற்கத் தேவையில்லை என்றும் சொன்னார். தென்னகத்தைச் சேர்ந்த சங்கராச்சாரியார்களில் ஒருவர் பகிரங்கமாக அவரை ஆதரித்தார். ''சங்கராச்சாரியாரால் தாம் சிறை வைக்கப்பட்டுள்ள ஆசாரக் காராக்கிருஹத்திலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ள முடியவில்லை'' என்று ஸி. ஆர். கருத்துத் தெரிவித்தார்.

''பிரிட்டிஷ் ஆட்சியின் சட்டங்கள், பழைமையான மதச் சடங்குகளுக்கும் பழக்க வழக்கங்களுக்கும் பாதுகாப்புத் தருவதாகக் கூறுகின்றன. அவையே எனக்கு ஆலயக் கதவுகளைத் திறந்து விடத் தடையாக உள்ளன'' என்றும் ஜமீன்தார் கூறினார். இதில் ஓரளவு நியாயம் இருந்தது. ஒரு வேளை தர்மகர்த்தா அனுமதித்தாலும், ஆசாரம் பார்க்கும் இரண்டு பேர் சேர்ந்து வழக்குத் தொடுத்து ஹரிஜன ஆலயப் பிரவேசத்துக்குத் தடை உத்தரவு பெற்று விட முடியும் என்று தோன்றியது.

புதிய சட்டம் தேவைப்பட்டது. ஸி. ஆர் வற்புறுத்த, சுப்பராயன், சென்னை மேல் சபையில் தாக்கல் செய்வதற்காக ஒரு மசோதா தயாரித்தார். ஹரிஜனங்களுக்கு ஆலயப் பிரவேசம் பெற்றுத் தரும் அதிகாரத்தைப் பக்தர்களுக்கு மசோதா வழங்கியது. அதாவது ஆலயத்துக்கு யார் வரலாம், வரக் கூடாது என்று நிர்ணயிக்கும் உரிமையை ஆலய தர்மகர்த்தாவிடமிருந்து மாற்றி, ஆலயத்தில் வழிபடும் பெரும்பான்மை மக்களிடம் அளித்துவிட முனைந்தது. மிகச் சிறுபான்மையினரான சிலரிடம் ஆலயப் பிரவேசத்தைத் தடுத்துவிடும் அதிகாரம் சிக்கிக் கொள்ளாமல் செய்துவிட முயன்றது.

வைஸ்ராயின் அனுமதியின்றி மசோதாவைச் சென்னை மேல் சபையில் விவாதிக்க முடியாது. ஸி. ஆருடன் ஒரு மணி நேரம் பேசிய பிறகு சென்னை கவர்னர், இத்தகைய அனுமதி வழங்க வேண்டும் என்ற கோரிக்கையைத் தாம் ஆதரித்து வைஸ்ராய்க்கு எழுதுவதாக ஒப்புக் கொண்டார். (தொடரும்)

---

''என் மனைவிக்கு மன நோய்...''

''மன நோய் மருத்துவரிடம் அனுப்புவது தானே?''

''அனுப்பினேன்! பாவம்! இப்ப டாக்டருக்கு மன நோய்!''





லக்ஷ்மி

# பூக்குழி

## 11

மீனுசல்மானிலிருந்த காமேஷின் ஃபிளாட்டிலிருந்து அவன் இரவு வெகு நேரம் சென்ற பின்தான் திரும்பிவிட்டிருந்தான், வருத்தமிலிருந்து மனம் நிம்மதியில்லாது ஓர் ஊசலில் தவிப்பதை ராஜ்குமார் உணர்ந்தான். ஏன் இப்படி?

குளிர் பானத்தைக் கண்ணாடி டம்ளரில் நிறைத்துக் கொண்டு அதைக் கையில் பிடித்தபடி அறைக்குள் மேலும் கீழுமாக நடந்து கொண்டிருந்தான். பானத்தை ஒரு வாய் பருகினான். இடது கையால் தலைமுடியை அளைந்தான். ஊஹூம்... அவனுக்கு உறக்கம் வர மறுத்தது. பரபரப்பா? துயரமா என்று இனம் விளங்காத ஒரு கலவை உணர்வில் தவித்துக் கொண்டு பானத்தை மெல்லப் பருகியபடி அறையை அளந்து கொண்டிருந்தான்.

''உனக்கு ஒன்று காட்டவேண்டும்'' என்று சொல்லி அலமாரியிலிருந்து காமேஷ் எடுத்து வந்த அந்தப் புகைப்படத்தை அவனிடம் சட்டென்று கொடுத்துவிடவில்லை. வறட்சியாக முறுவலித்தபடி அதைத் தானே பார்த்துக் கொண்டு அவன் பேசினான்.

''நான் இதுவரை உனக்கு இதைக் காட்டியதேயில்லே. மறந்தே போனேன். இதில் இருப்பதுதான் என் அம்மா. வேலை செய்து கொண்டிருந்த அந்த கிறிஸ்தவ வீட்டுக்கு வெளி நாட்டிலிருந்து வந்த விருந்தாளி ஒருவர், எல்லோரையும் போட்டோ எடுத்தப்போ அம்மாவையும் நிக்க வச்சு எடுத்தார். வாழ்க்கையிலே அதிர்ஷ்டத்தையே சந்திக்காத அம்மாவுக்கு கலர் போட்டோ எடுக்கிற அளவு யோகம்! அந்த மனிதர் ஊருக்குப் போனதும் மறக்காம வீட்டுக்காரருக்கு அனுப்பிய போட்டோக்களில் இதுவும் இருந்தது. வீட்டுக்கார அம்மா இதை என்னிடம் கொடுத்தாங்க. இது ஒண்ணுதான் என் அம்மாவின் நினைவாக இப்போது என்னிடம் இருக்கும் சொத்து.''

முகத்தருகே அவன் நீட்டிய புகைப் படத்தை ஆவலுடன் வாங்கினான் ராஜ்குமார். படத்திலிருந்தவளுக்கு நடுத்தர வயதிருக்கும். ஒடிந்து விழும் மெல்லிய தோற்றம். உள்ளடங்கிப்போன கன்னங்கள். இங்குமங்கும் கம்பியாக நரை ஓடிய கருத்த முடி. காமிராவைப் பார்க்கக் கூசிய இடுங்கிய கண்கள். உதட்டில் வெட்கம் நிறைந்த மெல்லிய சிரிப்பு. இடையில் சாயம் இழந்த வெப்புச் சேலை. வெள்ளை ரவிக்கை — வெறுமையான கழுத்து—கைகள்:

எங்கேயோ பார்த்தது போன்ற ஒரு நினைவு அவனுள்.

''இவங்களை நான் பார்த்திருக்கிறேன். எங்கேன்னுதான் நினைவுக்கு வரலே...'' வியப்புடன் நண்பனை உற்றுப் பார்த்தான் ராஜ்குமார்.

காமேஷ் பதிலுக்கு பக்கென்று சிரித்து விட்டான்.

''ஏதாவது வண்ணத்திரைப் படத்தில் இவங்களைப் போல யாரையோ — வேலைக்காரி வேடத்திலே பார்த்திருப்பே. குழப்பிக்காதே. இவங்களை நீ பார்த்திருக்கவே முடியாது. இனிப் பார்க்கவும் முடியாது. இவங்க பத்து வருஷத்துக்கு முன்னாடியே இறந்து போயிட்டாங்களே!

''அப்படியா?'' — இரக்கப்பட்டான் ராஜ்குமார்.

''உங்கம்மாவைப் போல இவங்க தமிழ் எழுதப் படிக்கத் தெரிஞ்சவங்க இல்லே. கைநாட்டுப் பேர்வழி. உழைப்பாளி. யார் சொன்னாலும் எதையும் நம்பிக்கொள்ளும் பெருத்த ஏமாளின்னு சொன்னால் நாத்துக்கு நூறு பொருத்தமாக இருக்கும். ஆமாம்! இவங்க நம்ப பரிதாபத்துக்குரிய ஏமாளிதான்....'' காரமாகப் பேசினான் காமேஷ். அவனது கண்கள் லேசாகக் கலங்கிக் காணப்பட்டன.

'இவன் என்ன சொல்கிறான்? பேச்சில் ஏன் இந்தக் கசப்பு?...' ராஜ்குமாருக்கு ஒரே குழப்பம்.

''காமேஷ்! பூடகமாகப் பேசாமல் வெளிப்படையாகச் சொல்லேன். உன் மனதிலிருக்கிற துயரத்தை நண்பன் என்கிற முறையில் நான் பகிர்ந்து கொள்ள ஆசைப் படறேன். அதுக்கு நான் தகுதியில்லாத

வனு?'' நெஞ்சம் நெகிழ்ந்து போய் தணிந்த குரலில் மெல்லக் கேட்டான்.

''தகப்பன் என்பவனின் முகத்தைக் கூட நான் பார்த்ததில்லை. தாய் வேலைக்குப் போனதும் வீட்டுச் சுவரையும் தட்டில் அவள் போட்டு வைத்த சோற்றையும் பார்த்துத் தனிமையிலே என் உணர்வுகளுடன் புகைந்து போய் வளர்ந்தவன். இப்போது திடீரென்று என் பழக்க வழக்கங்களை மாத்திக் கொள்ளச் சாத்தியப்படுமா? என் உணர்வுகளை உன்னோடு என்னால் பகிர்ந்துகொள்ள இயலவில்லை, மன்னிக்கவும்.''

முகத்தில் அடித்தாற்போன்ற பதில். காதுகளில் ரத்தம் ஏறி உடல் முழுவதும் சூடாகிவிட்ட அவமான உணர்வில் ராஜ்குமாருக்கு ஏன் கேட்டோம் என்றுதான் தோன்றியது.

காமேஷைப் பற்றி அவன் இன்னும் சில புதிய விஷயங்களை அன்றுதான் புரிந்து கொண்டான்.

'ஆசாமி ரொம்பப் பிடிவாதக்காரன். பலாக்காய் முரடு... அத்துடன் தன்மேல் சிறிதுபொறாமை. ஏன்? ஜாக்கிரதையாகத்தான் இனிப் பழக வேண்டும்.'

கையிலிருந்த மீதி குளிர் பானத்தை ஒரே மூச்சில் குடித்துவிட்டு வாயைத் துடைத்துக் கொண்டான். தம்ளரை முக்காலி மீது வைத்துவிட்டுப் படுக்கையிலே மெல்லச் சாய்ந்து கொண்டான். மூடு பனியில்லாத இரவு. கண்ணாடி ஜன்னல் வழியே வானம் பளிச்சென்று தெரிந்தது. பஞ்சுப் பொதியாக ஊர்ந்த மேகங்கள் இடையே இங்குமங்கும் தலை காட்டிய நட்சத்திரங்கள் கண்களைச் சிமிட்டின.

ஆமாம், அவன் ஏன் காமேஷ் விஷயத்தில் அளவு கடந்த அக்கறை செலுத்த வேண்டும்? படத்திலிருந்த அந்த அம்மாளை அவன் எங்கே பார்த்திருக்கிறான்? ம்....? மண்டையைக் குடைந்து கொண்டான். 'இடுங்கிய கண்களும் அந்தப் புன்னகையும்... ஏன் அவன் மனதை என்னவோ செய்கின்றன? காச நோயால் இறந்து போனவளாமே... பாவம்!'

உரத்த குரலில் தானே பேசிவிட்டு திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தான். குளிர்சாதன அறையில் கூட அவனுக்கு வியர்த்துக் கொட்டியது. நாற்காலியின் கைமீது கிடந்த துண்டை எடுத்து முகத்தை அழுத்தித் துடைத்துக் கொண்டான்.

'அவனது தாய் பஞ்சரத்தினமும் உடல் சுகமின்றித்தான் இருக்கிறாள். இந்தச் சமயம் அவளது அருகில் இல்லாமல் தொலை தூரமுள்ள வேறு நாட்டில் வேலை என்று உட்கார்ந்திருக்கிறேனே... நியாயமா? முட்டாள்தனம். தன்னையே சாடிக்கொண்டு தலையணை மீது முகத்தைப் பதித்தபடி படுக்கையில் காலை நீட்டிச் சாய்ந்துகொண்டான். கஸ்தூரி மஞ்சளின் மணம் அருகே வீசுவது போன்றதொரு பிரமை. பழைய நாட்களைத் தேடி கொண்டு ஓடிய நினைவுகளுடன் ஒன்றிப்போய் அசையாது படுத்துக் கிடந்தான்.



**ப**ஞ்சரத்தினத்துக்கும் குடும்பத்தின் மீது அகல்யாவைப் போன்று பொறுப்பு உணர்வு அதிகம்.

விடியற்காலையிலேயே எழுந்து குளித்துவிட்டு வீட்டுக் காரியங்களை வேகமாக கவனிக்கத் தொடங்கிவிடுவாள்.

பள்ளிக்குப் போகும் பருவம் வரை அவன் தாயின் அருகே — கூடத்துத் தரையில் பட்டுப் பாயின் மீது உறங்குவது வழக்கம்.

அவன் விழித்துக் கொண்டு எழும்போது அம்மா பின்கட்டில் தயிர் கடைந்து கொண்டிருக்கும் ஓசை கேட்கும்.



சிறிது நேரம் கூட அவளைப் பிரிந்திருக்க அந்தப் பிஞ்சு மனம் ஒப்பாது. ''அம்மா!'' என்று கூவியபடி ஓடிச் சென்று அவள் கழுத்தைக் கட்டிக் கொண்டு கன்னத்தோடு முகத்தை வைத்துக் கொண்டு 'என்னை விட்டுட்டு இங்கே வந்து....' சின்னக் கோபத்திலே சிணுங்குவான். கை வேலையைப் போட்டு விட்டுப் பஞ்சரத்தினம் அப்படியே மகனை வாரி மார்போடு அணைத்துக் கொள்வாள்.

''உன்னை விட்டுப் பிரிய இந்த உசிருக்குத் துணிச்சலே கிடையாதுடா கண்ணு! உனக்குச் சாப்பிடத்தான் பசு வெண்ணெய் கடைஞ்செடுக்கிறேன். சித்தப் பொறுத்துக் கோடா என் ராஜா!'... கெஞ்சி கொஞ்சி அவள் முத்தமிட்டு மகிழும்போது அவள் முகத்திலே பூசிக் குளித்த கஸ்தூரி மஞ்சளின் மணமும்... அவள் கூந்தலில் புரண்டு அவனது முகத்தை வருடிய இருவாட்சி மலரின் மணமும்....

கண்கள் கனக்க ராஜ்குமார் நினைவுகளுடன் நிமிர்ந்து எழுந்து படுக்கையின் மீது உட்கார்ந்தான்.

இரவு வேளைகளில் மடி மீது மகனைப் போட்டுக் கொண்டு மெல்ல அவன் முடியை வருடியபடி கதைகள் சொல்லித் தூங்க வைக்கும் அம்மாவின் குரல் அருகில் ஒலிப்பது போன்ற ஒரு நினைவில் உடல் சிலிர்த்துப் போனான் அவன்.

அம்மாவுக்குத்தான் அவன் மீது எத்தனை ஒரு பாசம்!

வெளியே போயிருக்கும் மகன் வீடு திரும்பும்வரை — நேரம் எவ்வளவானாலும் சாப்பிடாது உட்கார்ந்திருப்பாள் — தூங்கவும் மாட்டாள். ஊஞ்சலில் பலகையோடு ஒட்டிக்கொண்டு விடிய விடிய மகனுக்காகக் கண் விழித்துக் காத்துக் கொண்டிருப்பாளே!

''நேரமாகும்னு சொல்லிட்டுத்தானே போனேன். ஏன் பட்டினி கிடக்கணும்? தூங்காம உட்கார்ந்திருக்கணும்?'' அவன் கடிந்து கொள்வான்.

''என்னப்பா அப்படி லேசாச் சொல்லிட்டே? நீ சாப்பிடாமே வேலை மேலே



# படிக்கவிடாமல் செய்தவர்!





நூல்வேலி படத்தைப் பார்த்த யாருமே ஆரம்ப 'டைட்டில்' காட்சியின்போது சரிதா செய்வது போலக் காண்பிக்கப்படும் நிழல் படங்களை மறந்திருக்க மாட்டார்கள். டைட்டில்லைப் படிக்க விடாமல் செய்தவர் ராதாகிருஷ்ணன்.

இந்தியாவிலேயே இந்தக் கலையில் கைதேர்ந்தவர்களை விரல் விட்டு எண்ணி விடலாம். அவர்களில் திரு ராதாகிருஷ்ணனும் ஒருவர் என்பதற்குத் திறமையை வெளிக் கொணரும் திறனுள்ள பாலசந்தர் இவரை உபயோகப்படுத்திக் கொண்டதே சான்று.

மதுரை பல்கலைக் கழகத்தின் பி. காம் பட்டதாரி, பம்பாயிலுள்ள டான் அண்டு கம்பெனியில் டைரக்டர். மெல்லிசைக் குழு ஒன்று நடத்துகிறார். மிமிக்கிரி செய்கிறார். இவை அவரின் சில பொழுது போக்குகள்.

''நான் 12 வயதிலிருந்தே இந்தக் கலையைப் பயில ஆரம்பித்தேன். எனக்கு நானே குரு. எனக்கு ஓவியத்திலும் ஈடுபாடு இருந்ததால் என் திறனை வளர்த்துக் கொள்வது சிறிது சுலபமாயிற்று. சென்னை, பம்பாய் ஆகிய இரு டி. வி. ஸ்டேஷன்களிலும் என்னுடைய நிகழ்ச்சியை நடத்தி யிருக்கிறேன். எனக்கு பாலசந்தரிடமிருந்து அழைப்பு வந்ததே அவர் டி. வி. நிகழ்ச்சியை பார்த்த பிறகுதான்'' என்கிறார் ராதாகிருஷ்ணன்.

**— சாந்தி கோபாலன்**

---

வெளியிலே சுத்திக்கிட்டு இருக்கும்போது எனக்கு மட்டும் பசி பெரிசா வந்துடுமா?...''

அப்பா திடீர்னு இறந்து போனதும் அந்தத் துயரத்திலே அம்மா எப்படி ஒடிந்து போய்விட்டாள்?

அவரது காரியங்கள் ஆன பின்பு ஒரு நாள் இரவு அவன் வீட்டுக்கு வந்தபொழுது அம்மா கூடத்தில் மாட்டியிருந்த அப்பாவின் படத்தின் அருகே தரையில் தலையைக் கவிழ்த்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதைக் கண்டான்.

''என்னம்மா இப்படி? ஏன் தரையிலே உட்கார்ந்திருக்கீங்க?'' மகன் பதட்டமாகக் கடிந்து கொண்டான்.

''அவர் போனதும் நான் இனி ஒண்டியாகிவிட்டது போல ஒரு பயங்கர எண்ணம் வந்திடுச்சு. அவர் படத்தின் பக்கத்திலாவது உட்கார்ந்துக்கிட்டாத் தேவலாம் போல, ஒரு தெம்பு வராப்போல இருக்கு'' துக்கத்துடன் அவர் திணறினள்.

மகன் மனம் கரைந்து போய் அவள் கரத்தைப் பற்றிக் கொண்டு அருகே தானும் தரையில் அமர்ந்து கொண்டான்.

''இத்தனை பெரிய மகன் நான் இருக்கும் போது நீங்க எப்படியம்மா ஒண்டியாகப் போயிடுவீங்க? அப்படிப் போகத்தான். நான் விட்டு வைப்பேனு!...''

''விடமாட்டே. எனக்குத் தெரியும். ஆனாலும் கோழை மனசு குழம்பிப்போய் என்னென்னவோ எண்ணுதப்பா...'' தாய் அவன் தோளைப் பற்றிக் கொண்டு விம்மினள்.

''அழாதீங்க அம்மா... உங்க உடம்புக்கு நல்லதில்லே.'' பச்சிளங் குழந்தையைத் தேற்றுவது போல் முதுகைத் தட்டி அவன் எவ்வளவு நேரம் ஆறுதல் சொல்ல வேண்டியிருந்தது?

அகல்யாவைக் கல்யாணம் செய்து கொள்ள முடிவு செய்து தன் விருப்பத்தை அவன் தாய்க்குத் தெரிவித்தபோது மனத்தாங்கலுடன் மகனுடன் பேசப் பிடிக்காது தன் அறைக்குள்ளே சென்று முடங்கிக் கொண்டு விட்டாள். ஒன்று—இரண்டு என்று நாட்கள் பல நழுவின. அவனது பொறுமையும் தேய்ந்து மறைந்தது. முடிவில் ஒரு நாள் அவளது அறைக்குள் வந்து நாற்காலி ஒன்றை அருகில் இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தான்.

வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தாள் அவள். அந்தச் சில நாட்களில் அவள் உடல் பாதியாக இளைத்து விட்டிருந்தது. அழுது முகம் வீங்கி — கண்கள் இடுங்கிவிட்டிருந்தன. அவளைப் பார்க்க மிகவும் பரிதாபமாக இருந்தது.

''ஏழைப் பெண் அகல்யா என்பதனால் தானே இந்தக் கல்யாணத்துக்கு முட்டுக் கட்டை போடுறீங்க?'' சிறிது கோபத்துடன் அவன் கேட்டுவிட்டான்.

மகனை மெல்ல நிமிர்ந்து பார்த்தாள் பஞ்சரத்தினம்.

''அந்தஸ்தில் அவர்கள் நமக்கு எந்தவிதத்திலும் ஈடு கிடையாதுங்கிறது ஒரு காரணம். ஆனால் முக்கிய காரணம் வேறு ஒண்ணு...''

''என்னம்மா அது?...'' மகன் தாழ்ந்த குரலில் சீறினன்.

''அகல்யாவை எனக்கு முன்னே பின்னே தெரியாத,என்ன குணம் படைச்சவளோன்னு பயமா இருக்குது. ஆனால் நம்ப உறவுக்கார பொண்ணு நிர்மலாவைச் சின்னக் குழந்தையிலே இருந்து எனக்கு நல்லாத் தெரியும். என்னை மதிச்சுக் கடைசி வரை நல்லா வச்சுக் காப்பாத்துவான்னு நம்பிக்கை.''

மெல்லியதாக ஒலித்த அவன் குரல் கரகரத்தது.

''அகல்யா ஏழை. ஆனால் நல்ல பெண் அம்மா. அதுக்கு நான் உத்தரவாதம்.''

''முன் பின் தெரியாத பெண்ணை மருமகளா ஏத்துக்கிட்டா எங்கே அவள் வந்து நம்மைப் பிரிச்சுடுவாளோன்னு பயமா இருக்குப்பா. இந்த வயசிலே வியாதியோட நான் ஒண்டியாயிட்டா அந்தத் துயரத்தை என்னால் தாங்க முடியுமா யோசிச்சுப் பார் ராஜா!''

''யோசிச்சுப் பார்த்துத்தான் இந்த முடிவுக்கு வந்தேன். அகல்யா உங்களைப் பெத்த தாயைப் போல பரிவோட பார்த்துக்குவா அம்மா..? ஏன் வீணா கவலைப்படறீங்க?''

''பணம் காசு இதையெல்லாம் எங்கிட்டே இருந்து அவள் எடுத்துக்கிட்டாக்கூட நான் கவலைப்பட மாட்டேன். உன் மனசைக் குழப்பி, புத்தியைக் கலைச்சு உன்னை என்கிட்டேயிருந்து பிரிச்சுட்டா அந்த வேதனை என் உசிரைக் குடிச்சுடும். நினைவு வச்சுக்கோ.''

''என்னம்மா இது? சிறு பிள்ளை போல...'' அன்புடன் கடிந்து கொண்டு தாயின் கன்னத்திலே வழிந்த கண்ணீரைத் தன் கைக்குட்டையால் மெல்லத் துடைத்துவிட்டான் மகன்.

சிறிது நேரம் மௌனமாக உட்கார்ந்திருந்தாள் தாயார். திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தவள் போல் ''ராஜா! இப்படி வா'' என்று அவனை அருகில் அழைத்தாள்.

''நீ அகல்யாவையே கட்டிக்கோ அப்பா? என் ஆசிகள் உனக்கு.''

''உண்மையாகவா அம்மா?'' — மகிழ்ச்சி தாங்க முடியாது அருகில் நெருங்கி அவளது கரங்களை எடுத்துத் தன் முகத்தில் வைத்துக் கொண்டான் மகன்.

''உண்மையாகத்தான் சொல்றேன்... உன் மன நிறைவுதான் என் வாழ்வின் லட்சியம். நீ மகிழ்ச்சியோட இல்லாட்டி எனக்கு நிம்மதி இருக்குமா சொல்லு?''

''அம்மா! நன்றி அம்மா...'' ராஜ்குமார் கண்கள் பனிக்க அவளது தோளைத் தொட்டுத் தட்டி ஆர்ப்பரித்தபோது அவள் லேசாக முறுவலித்தாள்.

''அகல்யா அப்பாவிடம் சொல்லு — மகளை அழைச்சிட்டு ஒரு வாட்டி என்னை வந்து பார்க்கச் சொல்லு — அந்தப் பொண்ணுக்கிட்டத் தனியாக் கொஞ்சம் பேசணும் போல இருக்கு.''

''அதுக்கென்ன? உடனடியா ஏற்பாடு பண்ணிடறேன் அம்மா.'' சந்தோஷத்துடன் எழுந்தான் மகன்.

அகல்யா வந்து எங்கே தன்னை மகனிடமிருந்து பிரித்து விடுவாளோ என்று பயந்த அவளது அன்னையை அரபு நாட்டு வேலை இடைபுகுந்து பிரித்துக் கொண்டு விட்டதே!

தன்னையும் மீறிக் கண் இமைகளைச் சுட்ட கண்ணீரை அவன் விரலால் தட்டிவிட்டு விருக்கென்று எழுந்து உட்கார்ந்தான்.

## சஸ்திரச் சிகிச்சையில் ஒரு சாதனை!





முதுகெலும்பின் ஒரு பகுதியில் கட்டி உருவாகியிருப்பதைக் கண்டு அப்பகுதியை வெட்டி எடுத்து விட்டார்கள் ஜெஸ்ஸிக்கு. பாவம், அன்று முதல் அவள் படுத்த படுக்கையாகக் கிடந்துதான் காலத்தை ஓட்ட வேண்டியிருந்தது. எங்கேயாவது அழைத்துப் போக வேண்டுமானால் அவளை ஸ்ட்ரெட்சரில் படுக்க வைத்துத் தூக்கிச் செல்ல வேண்டியதுதான்!

இந்த நிலையில் மருத்துவத்துறை இதுவரை கண்டறியாத ஒரு புதிய ஆபரேஷனை மேரிலாண்ட் ஆஸ்பத்திரியில் டாக்டர் சார்ல்ஸ் எட்வர்ட் முதன் முறையாகச் செய்தார். இந்த அறுவைச் சிகிச்சையின்போது, 152 மில்லி மீட்டர் நீளமுள்ள முதுகெலும்பும் பகுதிக்குப் பதில் உலோகத்தாலான செயற்கை முதுகெலும்பும் பகுதி பொருத்தப்பட்டது. 19 மணி நேர ஆபரேஷன் வெற்றி அடைந்து ஜெஸ்ஸியினால் இப்போது சக்கர நாற்காலியில் உட்கார முடிகிறது. தானே சக்கர நாற்காலியைச் செலுத்திக் கொண்டு நகரவும் முடிகிறது. வாழ்நாள் முழுவதும் படுத்த படுக்கையாகவே இருப்பதற்கு இது எவ்வளவோ மேலல்லவா?

மேல் படத்தில் அமெரிக்க டாக்டர் சார்ல்ஸ் எட்வர்டையும் (மூக்குக் கண்ணாடி அணிந்தவர்) கீழே அவர் உருவாக்கிய உலோகத்தாலான, செயற்கை முதுகெலும்பும் பகுதி யையும் பார்க்கலாம்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''முடியாது... இனி ஒரு விநாடி கூட முடியாது....'' அவனது உணர்வுகள் உடைந்து உள்ளம் பொடியாகிவிடும் எல்லைக்கு வந்து விட்டிருந்தது.

ஒப்பந்த நாள் முடிந்த இரவே விமானத்தில் இடம் கிடைத்தால் பம்பாய்க்கு பயணப்பட்டு விடவேண்டும். ஊஹூம்...! இனியும் அவன் தாயையும் தாரத்தையும் பிரிந்து வாழவே முடியாது. (தொடரும்)





குமாரி அம்ருதா அலுவாலியா டென்னிஸ் ஆட்டத்தில் இன்று முன்னணி நட்சத்திரம். தமிழ்நாடு டென்னிஸ் சாம்பியன் பதவியை மூன்று தடவைகளுக்கு மேல் வென்று புகழ் சூடியவர். புதுதில்லி, விஜயநகரம், தாவண்கிரி ஆகிய இடங்களில் தேசிய டென்னிஸ் போட்டிகளில் வெற்றி வாகை சூடியவர். விம்பிள்டனிலும் அம்ருதா கலந்து கொண்டிருக்கிறார். இங்கிலாந்தில் வேறு டென்னிஸ் போட்டியில் குவார்ட்டர் பைனல் வரை வந்து புகழ் பெற்றிருக்கிறார். மேற்கு ஜெர்மனியில் உள்ள டிரயர் என்னுமிடத்தில் நடந்த டென்னிஸ் போட்டியில் இவருக்கு வெற்றி கிட்டியது. அம்ருதா அலுவாலியா எத்திராஜ் கல்லூரியில் பி. ஏ. (பொருளாதாரம்) மூன்றுவது ஆண்டு மாணவி.

புகைப்பட நிபுணர் உத்ரா தரும் விளக்கம்: அம்ருதாவை அவரது கல்லூரியிலேயே படம் எடுக்கப் போனேன். எனது அதிர்ஷ்டம் அவர் அப்போது பிராக்டிஸ் செய்து கொண்டிருந்தார். மழை வரும் சமய மாதலால் வெளிச்சம் அதிகமில்லை. 135 டெலி பயன்படுத்தி 250-5.6ல் எடுத்தேன். நான் ஆறு படங்கள் எடுத்தேன். அவற்றில் இம்மூன்றும் அவரது அநாயாசமான ஆக்ஷனை வெளிப்படுத்தும் உன்னதப் படங்களாக விளங்குகின்றன. பிராக்டீஸ் முடிந்து களைப்புற்ற வேளையிலும் எனக்காக அவர் தொடர்ந்து ஆடியது அவரது பெருந்தன்மையை எடுத்துக் காட்டியது.

படம்: உத்ரா விளக்கம்: குண்டுமணி



Sports picture page

கல்பகத்தின் வீடு அமர்க்களப்பட்டது. ரகுவைப் பார்க்கப் பெண் வீட்டார் வருகிறார்கள். கல்பகத்தின் பெண்கள் இருவரும் பம்பரமாய்ச் சுழன்று வீட்டை ஒழுங்கு படுத்திக் கொண்டிருந்தார்கள். கல்பகம் சோபாவில் சாய்ந்து கொண்டு அதிகாரம் செய்து கொண்டிருந்தாள்.

சாரு மூத்த பெண். அம்மாவை ஒரு முறை முறைத்தாள்.

''இதை யெல்லாம் ஓட்டை உடைசல்காரன் கிட்டப் போடுன்னு சொல்லியாச்சு. பத்து மாமங்கப் பழசெல்லாம் கட்டிண்டு அழறே. அப்புறம் இதை அங்கே வைக்காதே இங்கே வைக்காதேன்னு ஆர்டர் வேறே!''

கல்பகம் சிரித்துக் கொண்டாள்.

''சாரு, நான் பழங்காலத்து மனுஷி. பழசுன்னு உசிரு.'' நயமாக ஒலித்தது குரல்.

''நீயா பழங்காலத்து மனுஷி? செக்ஷன் ஆபீஸர் கல்பகம் பழங்காலத்து மனுஷின்னு யாராவது சொன்னா, சொல்றவாளுக்கு ஏதோ புத்திக் கோளாறுன்னுதான் சொல்லுவா. இந்த அடாசு ஃபர்னிச்சர்களை கட்டிண்டு அழறச்சே மட்டும் பழங்கால மனுஷி ஆயிடுவே. ஆபீசுக்குப் போறச்சே மாடர்ன் மாமி.''

''சாரு, நாவை அடக்கு. அவ உன் அம்மா'' என்றான் பின்னே ரகு.

''ரகு, இப்பவே சொல்லிட்டேன், உன் பெண்டாட்டி இந்த வீட்டிலே ஒரு நிமிஷம் கூட இருந்து குப்பை கொட்ட மாட்டா. வீடு பூரா ஒரே அடைசல். ரூம் பூரா அடச்சிண்டு இதென்ன மேசை, நாற்காலி கட்டில்? காயலான் கடை மாதிரின்னா இருக்கு? உன் வயிற்றிலே பிறந்து இந்தக் குப்பை கூளத்து நடுவிலே வாழ்ந்து புறப்பட்டுட்டோம். உன் பிள்ளைக்கு வரவளும் இதைச் சகிச்சுப்பான்னு நினைச்சுக்காதே, அம்மா''

கல்பகம் ஒரு புன்முறுவல் பூத்தாள்.

2

மஞ்சுளா, பெண் - தயாராம், அவள் தகப்பனார் - புவனா, தாயார்.

மூவரும் வந்து இறங்கினார்கள். கல்பகம் குடும்பத்தவர், ''வாங்கோ வாங்கோ'' என்று வாய் நிறைய வரவேற்றார்கள்.

தயாராம் தம்பதிகள் கன சரீரிகள். பிரம்பு நாற்காலிகளில் உட்கார்ந்ததும் கிரீச்சிட்டன. ''நன்றாக உட்கார்ந்து கொள்ளுங்கள். ஒன்றும் ஆகாது. பழைய காலத்து ஃபர்னிசர்'' என்று அபயம் கொடுத்தாள் கல்பகம்.

''பழசு பத்தரை மாற்றுத் தங்கமல்லவா?'' என்று தயாராம் பழைய பொன்மொழியை உதிர்த்துவிட்டு அறையை நோட்டம் விட்டார்.

மஞ்சுளா நல்ல சிவப்பு. அழகு கொஞ்சியது. நெற்றியில் பெரிய பொட்டு. பெண்கள் இருவருக்கும் பார்த்த மாத்திரத்திலேயே மஞ்சுவைப் பிடித்து விட்டது.

''ஸிம்பிள் அண்ட் ஸ்வீட்'' — ராதா சாருவிடம் கிசுகிசுத்தாள்.

''சாரு'' என்று கண்ணைக் காட்டினாள். இரு பெண்களும் உள்ளே விரைந்தனர்.

பிஸ்கட், மிக்சர், கூல்டிரிங் வந்தன.

''உன் பேர் என்ன சொன்னே?'' என்று பெண்ணைப் பார்த்துக் கல்பகம் கேட்டாள்.

''மஞ்சுளா.''

''குட், மஞ்சு. பெயரும் அழகாகத்தான் இருக்கு.''

''அம்மா ரகு காத்திண்டிருக்கான்...'' ராதா நினைவுபடுத்தினாள்.

''வாட் எ ஸ்டுபிட் லேடி ஐயாம்... ரகு இங்கே வா.''

ரகு ஸ்டைலாக வந்து தயாராமுடன் கைகுலுக்கினான். புவனாவுக்கு ஒரு நமஸ்தே போட்டான். மஞ்சுவின் பக்கத்தில் காலியாக இருந்த ஒரு சோபாவில் உட்கார்ந்து ''ஹலோ'' என்று அவளைக் காதோடு விளித்தான்.




அவனும் அதிகம் முகம் கவிழாமல் ஹலோ போட்டான்.

''பையனை நன்றாகப் பார்த்துக் கொள் ளுங்கள். எம். எஸ்ஸி. ஸ்டேட் பாங்கிலே ஆபீஸர். ஒரு துர்ப்பழக்கம் இடையாது.''

''எனக்குத் தெரியும். ரகு... உங்களுக்கு மஞ்சுளாவைப் பிடிச்சிருக்கா?'' தயாராம் கேட்டார்.

''எப்படிச் சொல்ல முடியும்? இப்பத் தானே வந்து உட்கார்ந்தேன்?'' எல்லோரும் சிரிக்கிறார்கள்.

''மிஸ்டர் தயாராம்!''

''எஸ் மேடம்.''

''என் வாழ்க்கையிலே நான் எவ்வளவோ சிரமங்களை அனுபவிச்சு இந்தக் குழந்தை களை முன்னுக்குக் கொண்டு வந்துட்டேன்.

''என் கணவர் என்னை விட்டுப் போன போது எனக்கு இருபத்தைந்து வயசு. அதுக்குள்ளே மூணு குழந்தைகள் குஞ்சும் குளுவானுமாக. இவாளுக்கெல்லாம் அவா அப்பா முகம் கூட நினைவிருக்காது. ஆபீ ஸுக்குப் போயிட்டு வீட்டுக்கு வந்தா அம் மான்னு ஆதரவாக் கூப்பிட்டு ஒரு தம்ளர் தண்ணீர் கொடுக்க ஓர் அன்பு உள்ளம் தேவை. உங்க பெண் அந்த அன்பை எனக் குத் தருவான்னு நினைக்கிறேன்.'' கல்பகம் உணர்ச்சி வசப்பட்டுப் பேசினாள், பிறகு ''ஒரு கண்டிஷன் தயாராம்'' என்றாள்.

''என்ன மேடம்?''

''மஞ்சு வேலைக்குப் போகக் கூடாது.''

''ப்பூ! இவ்வளவுதானா?''

''நோ வரதட்சிணை, சீர் செனத்தி எதுவும் தேவையில்லை. ஸிம்பிள் மேரியேஜ்.''

''என்னம்மா அவளுக்கு வாங்கியிருக்கிற பாத்திரம் பண்டமெல்லாம் எங்கே கொண்டு போடறது?''

''இது என்ன கோடவுனா? நீங்களே வச்சுக்குங்க. எனக்கும் என் பிள்ளைக்கும் வேண்டியது அழகான, அடக்கமான, அன் பான மாட்டுப் பெண். தத்திங் எல்ஸ்.''

''பர்னிச்சரெல்லாம் ஒரே பழசா இருக்கே அதையாவது புதுசா வாங்கித் தருகிறோமே!''

கல்பகம் முகம் இறுகிற்று.

''என்னாலே வாங்க முடியாமையா இதை எல்லாம் வச்சிருக்கேன்? நான் கொஞ்சம் பழமை விரும்பின்னு முதல்லேயே சொன் னேனே!''

## 3

ரகு — மஞ்சு திருமணம் ஆடம்பரமின்றி நடந்தேறியது. பெண்கள் இருவரும் தத் தம் வீடுகளுக்குத் திரும்பினார்கள்.

மஞ்சு வீட்டு நிர்வாகம், சமையல்கட்டு ஆட்சி எல்லாப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டாள். உண்மையிலேயே சமையல் கலையில் அவள் வல்லவளாகத்தான் இருந் தாள். புதுப் புது உண்டி வகைகள். கல் பகமும் ரகுவும் திணறித்தான் போனார்கள்.

கல்பகம் தன் மருமகள் பெருமையை ஆபீ ஸில் அனைவரிடமும் சொல்லிச் சொல்லி மாய்ந்து போனாள். நாளுக்கு ஒரு டிபன் கொண்டு போய் பலருடன் பகிர்ந்து கொண்டாள். மருமகளின் நளபாகத்தைக் கண்டு ஆபீஸில் அனைவரும் தங்களுக்கு முழு



அப்பா: உன்னைப் பெத்ததுக்கு ஒரு கழுதை யைப் பெத்திருக்கலாம்!

மகன்: அதுவும்தானே சும்மா ஊர் சுத் தும்....?

அப்பா: நிஜம்தான். ஆனால் என்னிடம் பாக்கெட் மணி வாங்காமல்தானே ஊர் சுத்தும்?

உ. ராஜாஜி

---

விருந்து போட வேண்டும் என்று நச்சரிக்கத் தொடங்கி விட்டனர்.

கல்பகம் ஒரு நாள் மஞ்சுவிடம் தன் ஆபீஸ் நண்பர்களின் விருப்பத்தைத் தெரிவித்தாள்.

''அதற்கென்ன கூட்டி வாருங்களேன்'' என்று சொல்லி விட்டாள். ஆனால் வீட்டின் அவல நிலைமையைச் சீர்படுத்தாமல் எவரை யும் விருந்துக்கு அழைக்க இஷ்டமில்லை. பழைய நாற்காலி, சோபாக்களை ஒழித்து விட்டுப் புதிதாக வாங்கிப் போட்டாலன்றி எவரையும் நுழைய விட மனமில்லை. சாரு வும் ராதாவும் தாங்கள் இருந்தவரை அம் மாவுடன் மன்றாடித் தோற்றுப் போனதை மஞ்சுவிடம் சொல்லி யிருந்தார்கள்.

''அம்மா, விருந்துக்கு இங்கே இடம் போறாதே!''

''மொட்டை மாடியில் நிலாச் சாப்பாடு போட்டு விடுவோம்.''

''மூணு மாடி ஏறி இறங்கணுமே!''

''பின்னே என்ன செய்வது?''

''ஒரு யோசனை....

''சொல்.''

''இந்தக் கண்டான் முண்டான் சாமா னெல்லாம் எவ்வளவு இடத்தை அடைத்துக் கொண்டிருக்கிறது? இதை யெல்லாம் வந்த விலைக்குப் போட்டுவிட்டு மாடர்ன் ஃபர் னிசரா வாங்கிப் போட்டா நிறைய இடம் இருக்கும். விருந்தை இங்கேயே வச்சுக் கலாம்.''

கல்பகம் மஞ்சுவைப் பார்த்த பார்வை அவளுக்கு அக்னியின் ஜ்வரம் கண்டது.

''வேறு யோசனை இருந்தால் சொல். இல்லாட்டா உன் விருந்து வேண்டாம்'' என்று சொல்லி விட்டுப் போய்விட்டாள்.

மஞ்சுவுக்கு மாமியார் போக்குப் புதிராக இருந்தது. மனப் போக்கில் இவ்வளவு நவீன மாக இருக்கும் மாமியார் இந்தப் பழைய தட்டு முட்டில் ஏன் இவ்வளவுக்குப் பற்றுக் கொண்டிருக்கிறாள் என்பது புரியவில்லை.

மஞ்சு பிறகு விருந்தைப் பற்றிப் பேச வில்லை. கல்பகமும் கேட்கவில்லை. ஆனால் மறு நாளிலிருந்து கல்பகம் ஆபீசுக்கு டிபன் எடுத்துப் போவதில்லை. மஞ்சு டிபன் பெட்டி யில் போட்டு வைத்தாலும் அதை வைத்து விட்டுப் போய்விடுவாள். மஞ்சு இரண்டு மூன்று நாள் பார்த்தாள். வேதனை தாங்க முடியாமல் கேட்டேவிட்டாள்.

''ஏம்மா டிபன் எடுத்துப் போகலை?''

''நீ ஊருக்குப் போயிருக்கிறதா சொல்லி யிருக்கேன். அதான் டிபன் வேண்டாம்.''

''ஏன் அப்படிச் சொன்னீங்க?''

''விருந்து விருந்துன்னு தச்சரிக்கிறீங்க: நீதான் புது ஃபர்னிசரில்லாட்டா கௌரவம் போயிடும்கிறே. நீ ஊரில் இல்லேன்னு கொஞ்ச காலம் இந்தப் பிடுங்கல்லேருந்து தப்பிக்கலாமேன்னுதான்.''

''அதுக்காகப் பொய் எதுக்கம்மா சொல்லணும்? இது உங்க வீடு. உங்க பர்னிசர். உங்க ஆபீஸ்காரங்க வந்து பார்த்தா உங்க கௌரவம் குறையுமேன்னுதான் சொன்னேன். மொட்டை மாடியிலேயே நிலா விருந்து வச்சுடலாம். கூப்பிடுங்கம்மா எல்லாரையும். அதுக்காக மத்தியானம் டிபன் எடுத்துக்கொண்டு போகாம இருக்கலாமா? உங்க மனசைச் சங்கடப்படாம வச்சிக்கிறதைத் தவிர எனக்கு வேறே வேலை ஏது மில்லேயம்மா.''

மஞ்சுவின் கண் கலக்கம் கல்பகத்தை மனம் நெகிழ வைத்தது. ''இந்தப் பெண்ணுக்கு என்னிடம் எவ்வளவு அன்பு!'' என்று நெக்குருகினாள்.

## 4

''மஞ்சு, இந்த ஃபர்னிசர்களுக்கு வயது தெரியாது. என் மாமனார் என் கணவருக்குக் கொடுத்தது. அந்தக் காலத்தில் நானும் உங்களைப் போலத்தான் இவற்றை விற்க வேண்டும் என்று என் கணவரிடம் வாதாடினேன். கரித்துக் கொட்டினேன். 'இது பரம்பரைச் சொத்து விற்க முடியாது' என்று ஒரேயடியாய்ச் சொல்லி என்னை வாயடைக்கச் செய்து விட்டார்.

''என் கணவருக்குச் சீட்டாட்டப் பழக்கம் உண்டு. ஆபீஸ் விட்டு நேராக கிளப்புக்குப் போவார். சீட்டாடிவிட்டு இரவு பத்து மணிக்குத் திரும்புவார். சில வருஷங்கள் இதைப் பற்றிக் கவலைப்படவில்லை. குழந்தைகள் பிறந்து வீட்டில் பண முடை தலை காட்டவே இதற்குக் காரணம் அவரது சீட்டாட்டம்தான் என்பது புரிய ஆரம்பித்தது. இதை வளர விட்டால் நடுத் தெருவில் நிற்க வேண்டியதுதான் என்று தோன்''றவே அவரைக் கண்டிக்க 'ஆரம்பித்தேன்.

''புரையோடிப்போன பழக்கம் விடுமா? நகை நட்டெல்லாம் போய் தாலி மிஞ்சியது: ஆபீஸில் ஏகக்கடன். என்ன செய்வதென்று புரியவில்லை.

''பலசரக்குக்காரன் ஒரு நாள் வந்து கூச்சல் போட்டான்.

'இந்தாப்பா, இந்த வீட்டில் நாங்களும் இந்த ஃபர்னிச்சரும்தான் இருக்கோம். உன் கடனுக்கு எதை வேணு எடுத்துக்கோ!' என்றேன் ஆத்திரம் தாளாமல்.

'இந்த ஃபர்னிசர் பழசானாலும் நல்ல தேக்கு மரங்க: நான் விலைக்கு எடுத்துக்கறேன். என்ன விலைன்னு குடுப்பீங்க' என்று கடைக்காரன் பேரம் பேச ஆரம்பிக்கவே நான் நிலைகுலைந்தேன்.

'ஐயா வந்ததும் கேட்டுச் சொல்றேன், நாளைக்கு வா' என்றேன்.

''அவர் வந்தார். பலசரக்குக் கடைக்காரன் வந்ததைச் சொன்னேன்.

''பத்து நாள் கழிச்சு வரச் சொல்றது தானே?''

''பத்து நாள் கழிச்சுப் புதையல் கிடைக்கப் போறதா? இந்த ஃபர்னிசரை அவன் விலைக்கு வாங்கிக்கிறேன்னான். பெண்டாட்டி பிள்ளைகளைத் தவிர எல்லாத்தையும்தான் வித்து ஒழிச்சாச்சு. இந்த மரச் சாமான்களைக் கட்டிண்டு ஏன் அழுணும்? இதை வித்தா இப்போதைக்கு அவன் வாயை அடைக்கலாமே'

'பெண்டாட்டி பிள்ளைகளைக் கேட்டாலும் குடுத்துடுவேன். இதை மட்டும் குடுக்க மாட்டேன்' என்றார் அவர்.

'ஆமா! இந்த வரட்டு ஜம்பத்திலே குறைச்சல் இல்லே. சீட்டாட்டத்திலே எவனாவது ஃபர்னிசரை வைச்சு ஆடுன்னு அப்பக் குடுத்துடுவேள். மானமா வித்துக் கடனை அடைக்கலாம்னு மாட்டேன்.'

''சீட்டாட்டத்திலே அவர் சகலத்தையும் இழந்து நிற்பதை நான் குத்திக் காட்டவே ரோஷம் பொங்கிக் கொதித்தார்.

'என்ன சொன்னே? சீட்டாட்டத்திலே வச்சு ஆடினுத் தோத்துடுவேன்னு சொன்னே? நான் இழந்ததையெல்லாம் மீட்டு வராம இந்த வீட்டிலே கை நனைக்கிறதில்லே. அதுக்குள்ளே இந்த ஃபர்னிசரை வித்து வாயிலே போட்டுண்டயோ என்னை உயிரோடு பார்க்க மாட்டே!'' என்று சூளுரைத்துவிட்டுப் போனவர்தான். அவரை நான் மறுபடியும் உயிரோடு பார்க்கவில்லை. தெருத் திருப்பத்தில் லாரி மோதி அங்கேயே உயிர் போய்விட்டது.

''அவர் ஆபீசிலேயே குமாஸ்தா வேலை கொடுத்தார்கள். கடனை எல்லாம் அடைத்துக் குழந்தைகளை 'வளர்த்து அவர்களையும் முன்னேற்றி நானும் முன்னேறினேன். 'இந்த ஃபர்னிசரை விற்று வாயிலே போட்டுண்டுடாதே' என்று அவர் சொன்ன கடைசி வார்த்தைக்குக் கட்டுப்பட்டுத்தான் இதுகளை அப்படியே வைச்சிருக்கேன். என் குழந்தைகளுக்கு அவரை பற்றி ஒன்னும் தெரியாது. தங்கள் தந்தையைப் பற்றி அவர்கள் இழிவாக நினைக்கக் கூடாது என்பதற்காகத்தான் அவர்களிடம் எதுவும் சொல்லல்லே. உன் அன்பு என்னை மனம் நெகிழ வெச்சுடுத்து. அதுனாலே சொல்லிட்டேன். எனக்குப் பிறகு நீ இந்த ஃபர்னிசரை என்ன வேண்டுமானாலும்...''

''அப்படி யெல்லாம் சொல்லாதீர்கள் அம்மா'' என்று மஞ்சு மாமியாரின் வாயைப் பொத்தினாள்.

---

கண்ணன்: உன் வீட்டுக்குப் போனப்போ உன் மனைவி ரொம்ப சின்ன டம்ளரில் காப்பி தந்தாள்.

முரளி: கோபித்துக் கொள்ளாதே. அவளைப் போய்ச் சண்டை போடறேன்.

கண்ணன்: வேண்டாம். அந்தக் காப்பியைக் குடித்ததும் அதை விடச் சின்ன டம்ளரில் கொடுத்திருக்கக் கூடாதா என்று ஏக்கமாக அல்லவா இருந்தது! - லலிதா செல்லப்பா






● வெள்ளிக் கிழமைக் காலையில் முத்துக் குமரனின் வெற்றிச் சிரிப்பைத் தாங்கிய அட்டைப் படத்துடன் 'கல்கி' தீபாவளி மலர் கிடைத்தது. முகப்புப் படம் ஆசாரிய சுவாமிகளுடையதாகத் தான் இருக்கும். அடுத்தது ராஜரிஷி ராஜாஜியின் எழுத்தோவியம் இருக்குமென்று எதிர்பார்த்தோம். மிகவும் நிறைவாக இருந்தது.

சித்திர மடல்கள், கதை, கட்டுரைகள் எல்லாவற்றையும் ஒவ்வொன்றாகப் பாராட்டு வதைவிட, மலர் மிகவும் சிறப்பாகத் தொடுக்கப்பட்டுள்ளது என்று கூறி மகிழ்ச்சி அடைகிறோம்.

இருந்தாலும் ஒரு கதையை மட்டும் குறிப்பிட்டுப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை. கதையாக என்ணாமல், பல ரசிகர்களின் மனக் குமுறலின் வெளிப்பாடே அது என்று தோன்றுகிறது.

'இன்ஸல்ட்' — மிகவும் பொருத்தமான தலைப்புடன் பி. எஸ். மணி எழுதிய கதையைத்தான் குறிப்பிடுகிறேன்.

போர்ணும்பட்டு இந்திரா பத்மனுபன்

● கல்கி தீபாவளி மலர் வெளியிட ஆரம்பித்த முதல் மலரிலிருந்தே இதுவரை அத்தனை மலர்களும் என்னிடம் பொக்கிஷமாக உள்ளன. தீபாவளிக்குப் புத்தாடை, பட்சணம், பட்டாசு எவ்வளவு இன்றியமையாததோ அவ்வளவு இன்றியமையாததாக ஆகிவிட்டது கல்கி மலரும். ரூபாய் இருபது என்றவுடன் சற்றுப் பகீரென்றது. இருந்தாலும் நான் வாங்காமல் இருப்பேனு? மலரைப் பார்த்தவுடன் அதற்கு இருபதும் கொடுக்கலாம், முப்பதும் கொடுக்கலாம் எனத் தோன்றியது.

பாண்டிச்சேரி கல்வே எஸ். சதாசிவம்

● அட்டைப் படக் கார்ட்டூன் மிகப் பிரமாதம். திரு ராஜ் நாராயணன் பாரதத் தாயின் (சரண்சிங்குக்குப் பதிலாக) கழுத்தையும் அதே நேரத்தில் ஜனநாயகத்தின் கழுத்தையும் நெறிப்பது போன்றே எங்களுக்குத் தோன்றியது.

சென்னை-88 எம். ராமசுப்பிரமணியன்

● தீபாவளியும் அதுவுமாக கல்கி அட்டையில் இந்த நாட்டின் அரசியலை அருவருப்புக்கும், கேலிக்கும் நகைப்புக்கும் உள்ளாக்கிய ராஜ் நாராயணனையும் அவரது குரு சரண் சிங்கையும் வெளியிட்டு எதற்கையா எங்கள் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டீர்கள்?

பாதிரிக்குப்பம் தங்க குஞ்சிதபாதம்

● வேண்டுமென்றால் வெல்லம் வேண்டாமென்றால் வேம்பு. சரண் சிங் இந்திராகாந்தியைக் கைது செய்தபோது ''ஆகா! இரும்பு மனிதர் — இரண்டாவது பட்டேல்!'' பிரதமர் பதவி மூலம் தன் கொள்கை வழி 'காந்திய சோஷலிஸம்' அமைக்க விரும்பினால் ''பதவிப் பித்தர், கட்சிமாறி'' என்று கேலி! என்ன உலகம்?

திருச்சி என். பாலு

● 'எக்ஸ்ரே' கட்டுரை சுவாரஸ்யமாக இருந்தது. ஆனால் ''சுதந்திர இந்தியாவின் ஆறாவது பிரதமர் சரண்சிங்'' என்று செளதுரி சரண் சிங் பற்றிய கட்டுரையில் விவரித்திருக்கிறார் திருமதி பி. ரங்கநாயகி. நாடு சுதந்திரமடைந்தது முதல் இதுவரை நேரு, லால் பகதூர் சாஸ்திரி, இந்திரா காந்தி, மொரார்ஜி தேசாய், சரண் சிங் ஆகிய ஐவர்தான் பிரதமராகியிருக்கிறார்கள்.

வேலூர் வேணுகோபால்

[நந்தாவைச் சேர்த்து ஆறு —ஆர்.]

● ஆளுனர் பிரபுதாஸ் பட்வாரி அவர்களின் கட்டுரை, ராஜாஜியை ஒவ்வொரு வரியிலும் நினைவூட்டுகிறது. தற்கால அவல நிலையைப் படம் பிடித்து வைத்து நம் தேசத்தின் தார்மீகச் சீரழிவை மிக நுட்பமாகத் தெளிந்து எழுதியுள்ளார். அவர் குரல் தனியொரு குரலாக ஒலித்து ஒடுங்கிப் போகாமல் நாடு முழுவதும் பேரொலியாக மாறி நம் மக்களின் மன உறக்கத்தைத் தெளிவிக்கட்டும்.

சென்னை-90 ப. ராமமூர்த்தி

● ''ஜே. பி.க்காக நாம் கண்ணீர் உகுக்க வேண்டாம். அந்தக் கண்ணீர் நந்நீராக நம் இதயத்துக்குள் சொரியட்டும். அங்கே மனச்சாட்சிகள் புனிதப்படட்டும். நம்பிக்கையுடன் எதிர்காலத்தை நோக்குவோம்'' —ஆறுதல் சொல்லும் உங்கள் தலையங்கத்தின் இறுதி வரிகளைப் படித்ததும் நானும் மனச்சாந்தி அடைந்தேன். ஒரு குறை. அண்ணலை அட்டையில் கண்டிருக்க வேண்டும்.

குறிக்காரன்வலசு த. இராமசாமி

● இரண்டு வேளை காப்பி அருந்தும் வழக்க முடைய நான் திடீரென்று ஒரு நாள் காப்பி அருந்தும் வழக்கத்தை விட வேண்டும் என்று நினைத்து, அதன் படியே நிறுத்தியும் விட்டேன். என் போன்றவர்களுக்கு வாய்ப்பளிக்காமல் சவாலில் தோல்வியடைபவர்களுக்கே மீண்டும் மீண்டும் வாய்ப்பளிக்கிறீர்களே!

சென்னை-18 மதுரை மணியன்

## வட்ட மேஜை

# நிறைவு தந்த தீபாவளி மலர்

# தாணாக்காரனின் தலைதீபாவளி

தூரன்

ஸ்டெடியாய் சல்யூட் அடித்துவிட்டு விரைப்பாய் நின்றான் சிங்காரம், இன்ஸ்பெக்டர் சையத்கான் முன். இருவரின் முடமுடப்பான காக்கிச் சீருடைகள் கஞ்சி மணத்தைப் பரப்பின.

எழுதிக் கொண்டிருந்ததை முடித்த சையத்கான் நிமிர்ந்து பார்த்தார், பெல்டும் தோள் சின்னமும் ப்ராஸோ போட்டுப் பளபளத்து மினுக்க எதிரில் நின்ற கான்ஸ்டபிள் சிங்காரத்தை.

சிங்காரத்தின் முகம் ஏதோ ஒரு தயவை நாடும் அசடு வழிதலால் ஏற்படும் முகச் சதைத் தழைவுகள் ஏற்படுத்திய விகாரத்துடன் இன்ஸ்பெக்டர் அவனை என்ன வேண்டும் என்று கேட்கக் காத்திருந்த ஆவல் பாவத்தைப் பிரதிபலித்தது.

''சிங்காரம் உனக்குப் பத்தொன்பது, இருபதாம் தேதி வெள்ளி, சனிக் கிழமை ஸ்டேஷன் டியூட்டி போட்டிருக்கிறேன்'' என்றார் இன்ஸ்பெக்டர் கட்டளைத் தொனியில்.

''அன்னிக்கு வேண்டாமுங்க.'' என்றான் மன்றாடும் முக பாவத்துடன் சிங்காரம்.



''இரண்டு ஆள் ராஜாவிலே இருக்கு: வேறே ஆள் இல்லையே'' என்றார் கான் கடுப்பாக.

''நான் இங்கிட்டு உங்க முன்னாடி நிக்கக் காரணமே பத்தொன்பது இருபதிலே எனக்கு ராஜா வேண்டுங்க. அதை வேண்டிக் கத்தானுங்க'' என்றான் சிங்காரம் அட்டென்ஷன் பாவத்தை விலக்காமல்.

''ஸ்டாண்ட் அட் ஈஸ்: அப்புறம் பேசு'' என்றார் சையத்கான்.

சிங்காரம் விரைப் பைத் தளர்த்திக் காலைச் சற்று அகட்டி வைத்து நின்றார்.

''இன்னா மேன் இப்ப இன்னாத்துக்கு லீவு? அன்னைக்குத் தீவளி. அங்க இங்க கலாட்டா இல்லாம இருக்க எல்லாரும் வேலையைப் பார்க்கணும். உலகமே கொண்டாட்டந் நில இருக்கிற சமயத்திலதான் தாணாக் காரனுக்குத் தவிப்பு. அவன் சாக்கிரதையா இருக்கணும்'' என்றார் சையத்கான், எழுந்து இடைத் தோல் பெல்டின் இடுக்கில் விரல்களை விட்டுத் தளர்த்தி விட்டுக் கொண்டு.

''எனக்குத் தலைத்தீவளிங்க.''

''தலை தீவளியா?''

''ஆமாங்க.''

''யாருடா அந்தக் குட்டி உன்னைப் பார்த்துக் கட்டிக்கிட்டது?'' என்று வெண்டலாகக் கேட்டார் இன்ஸ்பெக்டர்.

சிங்காரம் தலையைச் சொறிந்தான் தொப்பியைத் தூக்கிவிட்டு.

''ராஜா போடக் கட்டிக்கிட்டேன்னு கப்சா அடிக்கிறயா? ரெக்கார்டிலே உன் கண்ணாலம் வல்லியே?'' என்றார் இன்ஸ்பெக்டர்.

சிங்காரம் ஒரு குட்டை நோட்டை எடுத்து அதிலிருந்து எதையோ எடுத்து இன்ஸ்பெக்டரிடம் தந்தார்.

இன்ஸ்பெக்டர் அதை வாங்கிப் பிரித்துப் பார்த்தார்.



வைத்தீஸ்வரன்
கோயிலில் மட்டும் விபூதியுடன்
மாத்திரையும்
கொடுக்கிறார்கள்.
எல்லா
வியாதிகளுக்குமான
மருந்து அது.

— சு. தேனப்பன்

''பிக்பாக்கெட் ராமசுந்தரி இல்லே இவ? அல்லது, அவ தங்கச்சியா?''

''ராமசுந்தரியேதான்!''

''எப்படிடா இவளைத் துணிஞ்சு கட்டிக்கிட்டே, தாணாக்காரனாக இருந்து?''

''அதுதான் கதைங்க. அதுக்குப் பயந்துதான் ரெகார்டு பண்ணலே. அவளையும் போலீஸ் லைன்லே குடி வைக்க முடியாம எட்டி வச்சிருக்கேனுங்க.''

''இதுக்கிட்டே எப்படிடா மோவிச்சே?''

''கேளுங்க, சொல்றேன்'' என்று சிங்காரம் தாம் ராமசுந்தரியை மணந்த விவரத்தைச் சொல்லத் தொடங்கினார்.

''போன தீபாவளிக்கு முதல் நாளுங்க...''

''நீ கடைத் தெரு டூட்டிலே இருந்தே இல்லே?'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''ஆமாங்க. டூட்டி முடிஞ்சு நான் 1086 கிட்ட ஒப்படைச்சுட்டுப் பொறப்பட்டேன். பஸ்லே ஏறிக்கிட்டேன் போலீஸ் லைனுக்கு வர. ராமசுந்தரியும் ஏறிச்சு. சரி இதை இன்னிக்குப் புடிச்சிடலாம். இது இந்தத் தீவாளிக் கூட்டத்திலே ஏமாளிகள் நிறையக் காசோட பயணம் பண்ணுவாங்கன்னு நினைச்சுத்தான் ஏறுதுன்னு புரிஞ்சுக்கிட்டேன். இதுக்கு முந்தி ரெண்டு தடவை இவகிட்டத் தடயம் அம்படாம இல்லே இவ தப்பிச்சுக்கிட்டா. பொம்பளை. அடிச்சு உதைச்சு உண்மையைக் கக்கவும் வைக்க முடியலே.''

''ஆமாம். நினைவிருக்குது.''

''இவ கையிலேயே கண்ணு நான் பயணம் செஞ்சேன். இவளுக்குத்தான் தன் கைலாகவத்திலே ரொம்ப நம்பிக்கையாச்சே? ஒத்தன் பாக்கிட்லே கையைப் போட்டா. உடனே பிடிச்சா தப்பில்லே. அவ பர்ஸை நழுவ விட்டுட்டா அப்புறம் தடயம்?''

''சரி, சொல்லு.''

''இதை அவ தன் கைவசத்திலே வைச்சுக்கட்டும். அப்படியே கையுமெய்யுமா புடிச்சு ருசுப்பிக்கிறது சரியாக இருக்கும்னு தோணிச்சு. நான் எங்கிட்டோ பாக்குறாப்பலே இவளையே கவனிச்சுக்கிட்டிருந்தேன். இவளுக்குப் பிடிச்சது இன்னிக்குச் சனியன்னு நினைச்சுக்கிட்டேன். அந்த ஆளுக்கு என்ன இத்தினி உடம்பிலே உணக்கையா இருக்காது? இல்லே விதிதான் உடம்பிலே உணக்கை இல்லாமச் செய்துருதா? இவள் அவன் பையிலே அவனுடைய மொட்டைக் கறுப்புக் கையை விட்டுக்கிட்டே போனா.''

''அப்படியே அவ கையை அமுக்கிடறது தானே?''

''அதான் முடியலே. எனக்கும் அந்தத் திருட்டுக் கொடுத்திட்டிருந்த ஆளுக்கும் இடையிலே ரெண்டு பேரு. இவ பொம்பளை சீட்லே குந்திக்கிட்டே தான் தன் கைவரிசையைக் காட்டினா. நான் சத்தம் போட்டு, அல்லாட்டி அவ கையை அமுக்கப் பாஞ்சா, அவ கையை இழுத்துக்கிட்டா என்ன தடயம்? கெட்ட பேரு எனக்கு வரும் இல்லீங்களா? அவ பிக்பாக்கெட்டுதான்னு பஸ்லே இருக்கிறவங்களுக்குத் தெரியாதே. போலீஸ்காரங்களுக்கும்தான் நல்ல பேரு போயிடுச்சு. யார் யாரோ செய்யற அக்கரம்புகளிலுலே சும்மா ஒரு பொண்ணை வதைக்கிறேன்னு கெட்ட பேரு வந்தா?''

''காத்திருந்தது சரிதான்.''

''அவ கையை விட்டாளா? விட்டுக்கிட்டே போனாளா? அந்த ஆளு எங்கோ நினைப்போடு நின்னானா?''

''அவனும் தலை தீவாளிக்குப் பொண்டாட்டியைப் பத்தி நினைச்சுட்டுப் போயிருப்பான்.''

''அப்ப என்னாச்சு எதுத்தாப்பலே ஒரு ஃபாரின் காரு. பொட்டைத்தனமா ஓட்டியாந்தவன் பஸ் மேலே மோதப் பார்த்திருக்கான். டிரைவர் கெட்டிக்காரரு. நிலைமையைச் சமாளிச்சு ஸ்டீயரிங்கை ஒடிச்சிருக்காரு, டிரைவர் பாண்டுரங்கத்தின் வண்டி. சாமார்த்தியமாத்தான்....''

''போன தீவாளியின்போது ஆக்சிடண்டாச்சே அதுதானே?''

''ஆமாங்க.''

''அந்த வண்டிலேயா இருந்தே நீ. இது வரை தெரியாதே?''

''எப்படிச் சொல்லிக்க முடியும்? பின்னாடி நடந்ததைப் பார்த்தா, சொல்லுங்க. வண்டியை விட்டுப் பாசஞ்சருங்க எறங்கினாங்க. கிடைச்ச பஸ், வண்டி, ரிக்ஷான்னு ஏறிக்கிட்டுப் போனாங்க. நான் 'ஏ ராமசுந்தரி இப்படி நில்லு ஒதுக்கா'ன்னு அவளைத் தீண்டாம அதிகாரமாகச் சொன்னேன், அவ வந்த பஸ்லே தாவப் போனபோது அவளை மறித்து. 'என்னய்யா, நீ யாரு தடுக்கன்னுச்சு. 'அந்த ஆளு பையிலே கை போட்டியே எடு பர்சை' இன்னேன். அந்த ஆளு எட்டி நின்னுக்கிட்டிருந்தான். 'இன்னய்யா, நான் சேபடிக்காரின்னு நினைச்சியா?' என்றாள் அவள். நான் அந்த ஆளிடம் போனேன். அவனைப் பர்ஸ் இருக்கிறதா பார் என்றேன். பர்ஸ் அவன் பாண்ட் பையில் இல்லே. அவன் விடுவிடு என்று சாய்ந்த பஸ்ஸுக்குள் போய் ஏறிப் பார்த்தான். பர்ஸோடு வெளி வந்தான். 'எங்கிருந்தது?' என்றேன். அவன் சொன்ன இடம் இவள் உட்கார்ந்திருந்த சீட்டு. பஸ் சாயும்போது இவள் கை நழுவ விட்டிருக்க வேண்டும். இப்போது ராமசுந்தரியை ஒன்றும் பண்ண முடியாது. ஆனால் நான் சொன்னேன் அவளிடம், நான் அவள் கை பாண்டில் நுழைந்ததையும் எடுத்ததையும் பார்த்ததாகவும், அவள் பஸ் சாய்வின் போது நழுவ விட்டிருக்க வேண்டும் என்றும்! அவளுக்கு ஏதோ நல்ல காலம் அன்று நாளும் கிழமையுமாக என்று கூறினேன். அப்புறம்

அவளைக் கேட்டேன்: 'உனக்கு ஏன் இந்தப் பிழைப்பு? நல்லா வாழக்கூடாதா?'

''வாழ யார் அய்யா விடறாங்க நல்லா? இதை விட்டா வாழ இன்னு மொரு பொழைப்புதான். அதுக்கு நான் இட்டப் படலே..''

'உனக்கு நாதி இல்லையா? இப்படி வா பேசலாம்'னு அங்கிட்டிருந்த வாய்க்கால் மதவுலே போய் ஒதுக்காக் குந்திக்கிறோம்..

''என்னை அம்மா பெத்துப் போட்டுட்டுப் போயிட்டா. நாயமா பெத்தாளா அநியாயமாப் பெத்தாளான்னு தெரியாது.. ஆனா நான் என் குழந்தையை அநியாயமாப் பெக்க விரும்பலே. எப்படியோ வளந்தேன். யார் வளத்தாங்கன்னு தெரியாது. நினைப்புத் தெரிஞ்சப்ப, ஆறு ஏழு வயசிலே, முதல் பிக்பாக்கெட் அடிச்சேன். அதுவும் தீவுளி நாள். பசி. ஒரு ஐயா பட்சணக் கடையிலே பட்சணம் வாங்கி அட்டை டப்பா நிறைய ரொப்பிக்கிட்டுப் போறாரு. அவரை அவரு பட்சணம் வாங்கறதுக்கு முன்னாலே பிச்சை கேட்டேன். அதட்டிட்டுப் போயிட்டாரு. பிறவு அட்டைப் பொட்டியை வைச்சிட்டு அந்தாண்டை பார்த்தாரு. நான் லாவிட்டு வந்து எட்டாக்கப் போயி அத்தனையும் சாப்பிட்டேன் அப்புறம், இப்படி நானே லாவக் கத்துக்கிட்டேன். சின்னப் பொருள் பெரிசுன்னு. அதை வித்துச் சாப்பிட்டேன். அப்பறம் பர்சுக்குப் போனேன். எல்லாம் சொந்தப் பயிற்சிதான்.''

''வேலை செஞ்சு....''

''வேலைக்குப் போனா எந்த ஆம்பிளை சும்மா விடறான்? பொம்பளைங்க வேலைக்கே போவப்படாது, ஆம்பிளைங்களுக்குத் தங்களை அடக்கிக்கத் தெரியாத வரைக்கும்.''

''உன்னை ஒருத்தன் கட்டிக்கிட்டா?''

''எவன் கட்டிக்கிறேன்கிறான்? என் தொழிலைத் தெரிஞ்சு, என் மோரக் கட்டையைப் பார்த்து....''

''கட்டிக்கிறான்னு வச்சுக்கோ?''

''சும்மாங்காட்டி வச்சுக்க முடியுமா?''

''நான் ஆள் பார்த்துத் தாரேன்.''

''கட்டிக்கிறவ என்ன பண்ணணும்?''

''புருசன் பொன்சாதியாக் குடித்தனம் பண்ணணும். நல்லபடியா நல்ல குணத்தோட இந்தத் திருட்டுப் புரட்டு எல்லாத்தையும் விட்டு மறந்துட்டுக் கட்டின புருசனுக்குக் கொண்டாந்தாலும் கஞ்சிக்குக் கொண்டாந்தாலும் பாயசம் வேணும்னு பிக்பாக்கெட்டுக்குப் போவப்படாது..''

''எவன் ஐயா கட்டப் போறான், வீண் பேச்சு.''

''ஒரு திருடி உலகத்திலே குறையறதா இருந்தா நான் கட்டத் தயாரு.''

''அப்படியா சொன்னாய்? சிங்காரம் நீ மிகப் பெரிய மனிதன்'' என்றார், இன்ஸ்பெக்டர். சிங்காரத்தின் தோளைத் தட்டிக் கொடுத்தார்.

''ஸார்! திருடியை மணந்து திருட்டுத் தனமாகச் சொல்லாதிருந்ததை ஒப்புக் கொண்டு விட்டேன். தண்டனை தந்தாலும் சரி, தீபாவளிக்குப் பிறகு தாருங்கள்'' என்றான் சிங்காரம்.



''நான் ஒரு வளரும் எழுத்தாளர் சார்!''

''எப்படி?''

''துணுக்கு எழுதினால் அது சிறுகதையாக வளருகிறது. சிறுகதை எழுத ஆரம்பித்தால் அது நாவலாக வளருகிறது சார்!''

---

சையத்கானின் நினைவு கல்லூரியில் ஃப்ரெஞ்சு நாவலாசிரியர் விக்டர் ஹியூகோ எழுதிய 'லே மிஸரபிள்' நாவலில் ஜீன்வால் ஜீன் திருந்தித் தொழிலதிபதியாகிப் பல நன்மைகள் செய்த பிறகும் திருடனாகத் துரத்தியடிக்கப்பட்டது நினைவுக்கு வந்தது. பரீட்சையில் அவர் இன்ஸ்பெக்டர் ஜேவரின் குணச்சித்திரத்தைப் பற்றி வர்ணிக்க வேண்டி வந்தபோது, 'கடமையில் உள்ள ஆர்வத்தால் இன்ஸ்பெக்டர், இவ்வளவு ஆண்டு நல்வாழ்க்கை நடத்தி வந்த ஜீன்வால்ஜீனைத் துரத்தியடித்தது சரியல்ல. திருந்தியவரும் திருடனாகக் கருதப்பட்டால் யார்தான் தன்னைத் திருத்திக் கொள்வான்' என்று வாதித்து எழுதியிருந்தது நினைவுக்கு வந்தது. அதோடு இன்று அக்கிரமங்கள் அநேகம் புரிந்தவர்களை மக்கள் மன்னித்து மந்திரியாக்கிடும் பெரு மனத்தையும் இன்ஸ்பெக்டர் சையத்கான் எண்ணிப் பார்க்காமல் இருக்க முடியவில்லை.

''சிங்காரம், மருந்து தந்து குணப்படுத்தும் வைத்தியனுக்கு நோய் வராமல் தடுக்கும் 'வைத்தியன் மேலோன்; குற்றம் செய்தவனைச் சாகஸங்கள் புரிந்து பிடித்து வரும் போலீஸ்காரருக்கு ஒருவன் குற்றம் செய்யும் தொழிலையே துறக்கும்படி செய்து ஒரு குற்றவாளியைக் குறைக்கும் போலீஸ் காரன் மேலோன்'' என்று தழுதழுத்த குரலில் சையத்கான் சொல்லி, சிங்காரத்தின் இரு தோள்களையும் அன்புடன் பற்றி மெச்சலுடன் உலுக்கினார். ''என் சல்யூட்டைப்பெற உகந்தவன் நீ'' என்றார்.

சிங்காரம் பேச இயலாமல் திணறித் தம் மேலதிகாரியை வெறித்துப் பார்த்து அட்டென்ஷனுக்கு வந்து நின்றார்.

''இன்று முதல் உனக்கு ரஜா தீபாவளிப் பண்டிகை முடியும்வரை. நான் அந்தோணியையோ குலாம் முகம்மதையோ விட்டு உன் வேலையைப் பார்க்கச் சொல்கிறேன்'' என்று உறுதியான அழுத்தமான குரலில் சொல்லிவிட்டு, ''நீ போகலாம்'' என்றார்.

சிங்காரம் சல்யூட் அடித்துத் திரும்பி நகர்ந்தார்.



Dr. S. R. சிவராஜ்

## வாலிபர்கள் ! மணமானவர்கள் !!

**வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள பலஹீனங்களை நீக்கி,
தாம்பத்திய வாழ்வை இன்பமுடன் அனுபவித்து மகிழ,
இன்றே புகழ் பெற்ற 'ரகசிய வியாதி நிபுணர்'
ஆண்மைக் குறைவு நீக்கும் 'அரிய வைத்திய மேதை'**

# 'கவிராஜ்' டாக்டர் S. R. சிவராஜ், R.I.M.P.

*அவர்களிடம் சிறந்த முறையில் சிகிச்சை பெற, அவர் சுற்றுப்பயண முகாம்களில் நேரில் சந்தித்து வாழ்வில் மகிழ்ச்சி காணுங்கள். நேரில் சந்திக்க முடியாதவர்கள், குறைகளை விபரமாகத் தலைமை அலுவலகத்துக்கு எழுதவும். (கடிதங்கள் ரகசியமாகப் பாதுகாக்கப்படும்.) மருந்துகள் விரிவான விளக்கங்களுடன் வி.பி.பி. மூலம் அனுப்பி வைக்கப்படும்.*

**❋ குழந்தை பாக்கியம் (கர்ப்ப அணுக்கள்) இல்லாதவர்கள்**

**❋ கல்யாணமாகி பல ஆண்டுகளாகக் குழந்தை பாக்கியமே இல்லாதவர்கள்**

*சிறந்த முறையில் சிகிச்சை பெற்று, கர்ப்ப அணுக்கள் தேவையான அளவு உற்பத்தியாகி குழந்தை பாக்கியம் பெற்று மகிழ்ச்சியடையும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். 25 வருட சுற்றுப் பயணத்தில், அவரிடம் சிகிச்சை பெற்றுப் பலன் அடைந்தவர்கள் பல்லாயிரம் பேர்கள். அவர்களைப் போல் நீங்களும் பலன் அடைய வேண்டுமல்லவா?*

**விரைவில் பலன் காண விசேஷ 1 மாத சிகிச்சை ★ குறைந்த ஸ்பெஷல் 1 மாத சிகிச்சை**

| A-வகுப்பு | B-வகுப்பு | C-வகுப்பு | மீடியம் | ஸ்பெஷல் | 1-ம் நெம்பர் | நேரில் பெறலாம் |
|---|---|---|---|---|---|---|
| ரூ. 350-00 | 250-00 | 175-00 | 115-00 | 90-00 | 75-00 | V.P.P.யிலும் பெறலாம் |

*மாதாந்திர சுற்றுப் பயண விவரம்: ஒவ்வொரு ஆங்கில தேதிகளிலும்*

**பிரதம வைத்தியர் தங்குமிடங்கள் :**

*சென்னை-600002, 1 முதல் 8ந் தேதி வரை: ராமச்சந்திரா லாட்ஜ், போன்: 846526. 6 அத்திப்பட்டன் தெரு, அண்ணாசாலை சமீபம். P QRR. & Sons — பெட்ரோல் பங்க் மேற்புறம் ரோடு. காலை 7 மணி முதல் இரவு 7 மணி வரை.*

*சேலம் தலைமை அலுவலகம்: , 11, 16, 17, 18, 19, 20, 27, 28, 29, 30 தேதிகள்.*

*திருச்சி: 9, 10 தேதி: அசோக் பவன், ஜங்ஷன் ரோடு. போன்: 25783. காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.*

*கோவை: 12, 13ந் தேதி. ஸ்ரீ லக்ஷ்மி லாட்ஜ். ராஜ வீதி. போன்: 33330.*

*பொள்ளாச்சி 14ந் தேதி: மாடர்ன் லாட்ஜ். தாலுகா ஆபீஸ் எதிர் சந்து. காலை 8 மணி முதல் 12 மணி வரை.*

*திருப்பூர் 14ந் தேதி: ராமகிருஷ்ணா லாட்ஜ். ஈஸ்வரன் கோவில் வீதி. மாலை 3 மணி முதல் 5 மணிவரை.*

*ஈரோடு 15ந் தேதி: ஆனந்த் லாட்ஜ். ஈஸ்வரன் கோவில் வீதி. காலை 7 மணி முதல் மாலை 5 மணி வரை.*

*மதுரை 21, 22 தேதி: மணீஸ் கேப். (டவுன் ஹால் ரோடு) போன்: 22019. காலை மணி முதல் இரவு 7 மணி வரை.*

*அருப்புக்கோட்டை 23ந் தேதி: ராதா லாட்ஜ். ஜி. சி. ரோடு, காலை 9 மணி முதல் பகல் 12 மணி வரை.*

*திருநெல்வேலி: 23, 24ந் தேதி: நெல்லை லாட்ஜ். காலை 7 மணி முதல் இரவு 8 வரை.*

*மதுரை 26ந் தேதி: மணீஸ் கேப், டவுன் ஹால் ரோடு, போன்: 22019. காலை 7 மணி முதல் இரவு 8 மணி வரை.*

*திண்டுக்கல் 26ந் தேதி: ஆரியபவன் லாட்ஜ் பழனி ரோடு. மாலை 4 மணி முதல் இரவு 8 மணி வரை.*

**உதவி வைத்தியர் தங்குமிடங்கள் :**

*விழுப்புரம் 3ந் தேதி: வாசவி விஹார் ஹோட்டல், எம். ஜி. ரோடு. காலை 7 மணி முதல் பகல் 12 மணி வரை.*

*கடலூர் என்.டி. 3ந் தேதி: ஹோட்டல் பிருந்தாவன். மாலை 3 மணி முதல் இரவு 8 மணி வரை.*

*சிதம்பரம் 4ந் தேதி: ஜெயராம் லாட்ஜ். (மேல வீதி) காலை 7 மணி முதல் பகல் 3 மணி வரை.*

*கும்பகோணம் 5ந் தேதி: தாஜ்மஹால் லாட்ஜ் பொற்றாமரைக் குளம் (போன்: 1423) காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.*

*தஞ்சாவூர் 6ந் தேதி: அசோகா லாட்ஜ். (ராஜா கலை அரங்கம்) காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.*

*கம்பம் 21ந் தேதி: யூனிவர்சல் லாட்ஜ். காலை 8 மணி முதல் பகல் 12 மணி வரை.*

*தேனி 21ந் தேதி: பாண்டியன் லாட்ஜ். மாலை 3 மணி முதல் 6 மணி வரை.*

*விருதுநகர் 23ந் தேதி: ஹோட்டல் ஆஞ்சநேயா. காலை 7 மணி முதல் 12 மணி வரை.*

*இராஜபாளையம் 23ந் தேதி: அசோகா லாட்ஜ். மாலை 3 மணி முதல் 6 மணி வரை.*

*நாகர்கோவில் 24ந் தேதி: உடுப்பி ஸ்ரீ கிருஷ்ண பவன், போஸ்டாபீஸ் ஜங்ஷன் ரோடு, காலை 7 மணி முதல் மாலை 5 மணி வரை.*

*தென்காசி 25ந் தேதி: பார்வதி லாட்ஜ். காலை 7 மணி முதல் பகல் 12 மணி வரை.*

*கோவில்பட்டி: 25ந் தேதி சரஸ்வதி லாட்ஜ். மாலை 3 மணி முதல் 6 மணி வரை.*

**தலைமை அலுவலகம் :**

## சிவராஜ் சித்த வைத்தியசாலை

**C-56, தமிழ்ச் சங்கம் ரோட் பின்புறம்**

*(சென்ட்ரல் டாக்கீஸ் வடபுறமுள்ள ஏரியின் முன் பக்கம்)*

**காந்தி ஸ்டேடியம் — சேலம்-636007**




## அத்தியாயம் 14

# நான்காவது உருவம்

டெய்லரின் படகில் இருந்தவர்களோ, சங்கர் பந்தின் படகுக் கூட்டத்திலிருந்த வீரர்களோ சற்றும் எதிர்பாராத அந்தத் திடீர் நிகழ்ச்சிகளைத் துவக்கியவன் படகில் சாய்ந்து கிடந்த ஒற்றைக் கால் ஸில்வர் தான். காலைண்ட்ராவை அடையப் பத்து நிமிஷங்களே இருந்த சமயத்தில் சரேலென்று ஒருபுறமாகப் புரண்ட ஸில்வர் தன் ஊன்றுகோல்களில் ஒன்றை எடுத்து அனந்தின் மீது அசுர வேகத்தில் வீசினான். வீசியது மட்டுமின்றிக் கண் இமைக்கும் நேரத்தில் எழுந்து மற்றொரு ஊன்றுகோலைத் தாங்கிக் கொண்டு நின்று இடையிலிருந்த கைத் துப்பாக்கியையும் வேகமாக உருவினான். அவன் காட்டிய வேகத்துக்கும் சிறிதும் குறிவைக்கா விட்டாலும் அனந்தின் மண்டையை நோக்கி வீசப்பட்ட அவன் கைத் தடியின் பலத்துக்கும் அனந்தைத் தவிர வேறு யாராயிருந்தாலும் பலியாகி யிருப்பார்களென்றாலும், கண்களை அரைவாசி மூடியிருந்த அனந்த் மட்டும் மின்சாரத்தால் இயக்கப்பட்டவன் போல் துரிதமாக இயங்கினான். ஸில்வரின் ஊன்றுகோல் தன்னை நோக்கிச் சீறி வந்த அதே சமயத்தில் சட்டென்று தலை குனிந்த அனந்த், தடியின் வீச்சிலிருந்து தப்பியது மட்டுமல்லாமல் குனிந்த வேகத்தில் தலையை நிமிர்ந்து இரு கைகளிலும் தோன்றிய கைத் துப்பாக்கிகளிலொன்றை வெகு வேகமாகச் சுடவே, துப்பாக்கி ரவை ஸில்வரின் வலது கையில் பாய்ந்தது. குறி தப்பியதன் விளைவாகக் கைத்தடி படகு ஓரத்தில் தாக்கி, ஒலி யெழுப்ப, அனந்த் சுட்ட துப்பாக்கியின் பயங்கர ஒலி படகிலிருந்த மற்றவர்களுக்குப் பயத்தையும் ஒருங்கே அளிக்க, காயமடைந்த ஸில்வர் 'ஹா' என்று கதற, டெய்லரும் சங்கர் பந்தும் ராணியும் ஏக காலத்தில் தங்கள் கைத்துப்பாக்கிகளை எடுத்துக் குறி வைக்கவே, பலருக்குக் கடல் சமாதி கிடைக்கும் பயங்கரச் சூழ்நிலை அந்தச் சமயத்தில் உருவாயிற்று.

முடிந்திருந்தால் டெய்லர், சங்கர் பந்த் இருவருமே அனந்தைச் சுட்டிருப்பார்கள். ராணி தன் கைத் துப்பாக்கியை டெய்லரை நோக்கிக் குறி வைத்திருந்ததால் டெய்லருக்கும் இந்தப் பாவிகளின் உலகத்தை விட்டுப் பரம பிதாவின் புண்ணிய உலகத்துக்குச் செல்லும் வாய்ப்பு இருந்தது. ஆனால் இது எதுவுமே நிகழாதிருக்கவும், எல்லோரையும் காப்பாற்ற வந்த தேவ தூதன் போலவும் படகில் எழுந்து நின்று கொண்டிருந்த அனந்தின் துப்பாக்கிகள் மீண்டும் மும்முறை சப்தித்தன. அந்த சப்தங்கள் நிகழ்வதற்கும் சங்கர் பந்தின் கைத்துப்பாக்கி அவர் கையிலிருந்து பறப்பதற்கும் டெய்லரின் துப்பாக்கி கையிலிருந்து சுடப்பட்டாலும் அது திடீரென்று திசை மாறி ரவை கடலில் பாய்வதற்கும், ராணியின் துப்பாக்கி அவள் காலின் கீழ் விழுந்து சரணாகதி செய்வதற்கும், பரம ஒற்றுமை இருந்ததால் மேற்கொண்டு யாருக்கும் துப்பாக்கியை இயக்க அவசியமில்லாமல் போயிற்று. அந்த சமயத்தில் மிகவும் இரைந்து பேசினான் அனந்த். ''உங்கள் எல்லோரையும் எச்சரிக்கிறேன். நான் சொல்வதை மீறி யார் நடந்து கொண்டாலும் ஆயுதம் தடியா யிருந்தாலும் கைத துப்பாக்கியா யிருந்தாலும் குறுவாளா யிருந்தாலும் அவற்றைப் பிரயோகிப்பவர்கள் யாரா யிருந்தாலும் அந்த விநாடியே அவர்களுக்கு இந்த உலகத்திலிருந்து விடுதலை அளிக்கத் தயங்க மாட்டேன்'' என்று கூறினான்

அனந்த். அவன் குரலில் நிச்சயமிருந்தது. அதிகாரம் இருந்தது. நன்ருக விரிந்த அவன் கண்களில் பரிதாபமும் இருந்தது.

இந்தச் சொற்களையும் அவற்றில் உறுதியையும் கண்ட மற்றவர்கள் அவன் நிதானத்தைக் கண்டு வியந்தார்கள். அவன் சுடும் திறமையைக் கண்டு வியந்தார்கள். அவன் தங்களைப் பரிதாபத்துடன் பார்த்ததைக் கண்டும் வியந்தார்கள். இதனல் ஊமைகளாகிவிட்ட அத்தனை பேர்களில் டெய்லரே முதலில் பேசினன். ''அனந்த்! நீ துப்பாக்கி சுடும் வேகத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனல் இப்பொழுது நிகழ்ந்ததை என்னல் கூட நம்ப முடியவில்லை.'' என்று மராட்டியில் பேசிய டெய்லர் உணர்ச்சி மிகுதியால் சுய பாஷைக்குத் திரும்பி ''மை காட்! அனந்த்! யூ ஆர் ஃபாஸ்ட் சவன் ஃபார் மீ (அனந்த்! என்னை விட உன் வேகம் மிக அதிகமாயிருக்கிறது)'' என்று பாராட்டிய டெய்லரின் சொற்கள் சத்தியத்துடன் ஒலித்தன. மேலும் அவனே சொன்னன்: ''அனந்த்! ஒன் கான் ஷூட் த ஹாண்ட், பட்டு டிப்னெக்ட் எ பிஸ்டல் சஸ் த வொர்க் ஆப் ஆன் ஆர்ட்டிஸ்ட் (அனந்த்! கையில் யாரும் சுட்டுவிடலாம். ஆனல் கையிலிருக்கும் துப்பாக்கியைச் சுட்டு அதைத் திசை திருப்பி விடுவது ஒரு தனிக் கலை)'' என்று.

அந்தச் சமயத்தில் அங்கே வந்த தமது படகிலிருந்த சங்கர் பந்த் ''இந்திரஜீத்! மால்வான் தளபதியை, மகாராஷ்டிர மன்னர் பிரதிநிதியை நோக்கி நீ துப்பாக்கியை நீட்டியிருக்கிருய். இது மன்னருக்குச் செய்த அபராதம். இதற்கு நீ பதில் சொல்லும்படியாயிருக்கும்'' என்று துப்பாக்கி பறந்தும் துணிவை இழக்காமலும் தமது அதிகாரத்தைக் குறிப்பிட்டும் பேசினர்.

பேசாதவர்கள் இருவர். துப்பாக்கி ரவை பாய்ந்த கையைக் கெட்டியாகப் பிடித்திருந்த லில்வர் ஒருவன், காலடியில் கிடந்த துப்பாக்கியை நோக்கிக் கொண்டிருந்த ராணி ஒருத்தி. இருவர் உள்ளத்திலும் அச்சம் சிறிதுமில்லை. வேதனை சூழ்ந்து நின்றது. தனது கைத்தடி வீச்சுக்குத் தப்பக்கூடியவன் யாரும் கிடையாதென்று இறுமாந்திருந்த லில்வர் அனந்த் எப்படித் தப்பினன் என்ற வேதனைப்பட்டுக் கொண்டிருந்தான். தன்னிடம் மையல் கொண்டு தென்னஞ் சோலையில் தன் உணர்ச்சிகளையெல்லாம் கொள்ளை கொண்ட அனந்துக்குத் தன் கைத்துப்பாக்கியைச் சுடும் மனம் எப்படி வந்தது என்ற வேதனையால் ராணியின் மனம் நெகிழ்ந்து கொண்டிருந்தது.

அனந்த் மட்டும் எந்த உணர்ச்சியையும் காட்டவில்லை. ''லில்வர்! ஏதுமறியாத பூனை போல் படகில் சாய்ந்தபோதே நீ எந்த நிமிஷத்திலும் புலியாக மாறுவாய் என்பதை நான் எதிர்பார்த்திருந்தேன். அப்படி மாறும் போது உன் பெல்டில் உள்ள கைத்துப்பாக்கிகளை எடுக்க மாட்டாய் என்பதும் எனக்குத் தெரியும். தவிர இதே கைத்தடியை வீசிச் கார்வாரில் ஒரு காவலன் மண்டையைப் பிளந்ததை நானேபார்த்



இருக்கிறேன். அது உனக்குத் தெரியும். ஆகையால் உன் பொய் அசதியை மற்றவர் நம்பலாம். நான் நம்பவில்லை. நம்ப மாட்டேன் என்பது உனக்குப் புரிந்திருக்க வேண்டும். உன்னைக் கூரிய அறிவுள்ளவன் என்று நினைத்தேன். இக்கட்டில் சிக்கிக்கொள்ளும் போது எந்த மேதாவியும் முட்டாளாகிறான் என்பதற்கு நீ ஒரு எடுத்துக்காட்டு'' என்று சற்று விளக்கமாகவே சொன்னான்.

ராணியையும் நோக்கி, ''ராணி! நீ டெய்லரைச் சுட்டிருக்கலாம். ஆனால் டெய்லர் மிக வேகமாகச் சுடக் கூடியவன். அவன் துப்பாக்கி ஒரு விநாடி முன்னதாக இயங்கினாலும் உன்னை இழந்திருப்பேன். உன் துணிவு அதிகம் ராணி! ஆனால் அசந்தர்ப்பத் துணிவு ஆபத்தை விளைவிக்கும்'' என்று கூறினான் வருத்தம் தோய்ந்த குரலில்.

பிறகு மால்வான் தளபதியைப் பார்த்து, ''தளபதி! டெய்லருக்குச் செய்யப்படும் நீண்ட விசாரணைக்குச் செய்யப் படுகிறது. ஆகையால் சற்று நிதானப்படுத்திக் கொள்ளுங்கள்'' என்று கூறிவிட்டு, ''டெய்லர்! படகைச் செலுத்து. அலைகள் நிதானப்பட்டு விட்டன. சீக்கிரம் காஸண்ட்ராவை அடைவோம். இரவு பூராவையும் இங்கேயே கழிப்பது உசிதமல்ல'' என்றான்.

டெய்லர் மேற்கொண்டு எதுவும் பேசவில்லை. உட்கார்ந்து துடுப்புக்களைத் துழாவினான். அதைத் தொடர்ந்து அனந்த காட்டிய சைகையால் மால்வான் படகுகளும் நகர்ந்தன. ''ராணி! வில்வர் கைக் காயத்துக்குக் கட்டுப் போடு. காஸண்ட்ராவில் அவன் கையில் இருக்கும் ரவையை எடுப்போம்'' என்றான். அவன் ஆணையை நிறைவேற்ற ராணி படகின் மறு புறத்துக்குச் சென்றாள். வில்வரின் கையைச் சோதித்துத் தன் ஆடையின் நுனியைச் சிறிது கிழித்துக் கட்டுப் போடவும் முற்பட்டாள். படகுகள் விரைந்தன காஸண்ட்ராவை நோக்கி.

வில்வரின் காயத்துக்குக் கட்டுப் போட்டு நிமிர்ந்து நோக்கிய ராணிக்குப் பெரு வியப்பும், அபரிமிதமான மதிப்பும், ஆசையும் ஏற்பட்டன.

அவள் கண்களுக்கு எதிரே கடலில் நிர்மாணிக்கப்பட்ட பெரு மாளிகை போல் எழுந்தது காஸண்ட்ரா. அதன் பரிமாணத்தை நோக்கி அவள் வியப்படைந்தாள். அதை நிர்மாணித்த கலைஞனிடம் பெரு மதிப்பு அவள் இதயத்தில் உற்பத்தியாயிற்று. இப்பேர்ப்பட்ட ஒரு கப்பல் மட்டும் சிந்து தூர்க்கத்திலிருந்தால் அதன் மூலம் எத்தனை



லாபம் ஏற்படும் என்ற சிந்தனை அவள் ஆசையைக் கிளறியது. இப்படி இணைந்த பல எண்ணங்களால் அவள் சித்தம் சுழன்றபோது மெல்ல அருகில் வந்தது காஸண்ட்ரா. அடித்தளமெங்கிலும் பல துவாரங்களிலிருந்து பீரங்கி வாய்கள் ஜல மட்டத்துக்குச் சிறிது மேலே விழித்துக் கொண்டிருந்தன பயங்கரமாக. அதற்கும் மேலே இருந்த இரண்டாவது மட்டத்தில் இன்னொரு சுற்றுக்குப் பல பீரங்கித் துளைகள் இருந்தன. அவற்றின் வாய்களில் பீரங்கி

முனைகள் இருட்டில் தெரியவில்லையென்றாலும் பல குகைகள் போலத் தெரிந்த அவற்றின் பயங்கரம் விவரணத்துக்கு அப்பாற்பட்டதாயிருந்தது. அதன் மூப்பெரும் பாய் மரங்களும், பாய் மர உச்சிகளுக்குச் சற்றுக் கீழே தொங்கிய சிறு விளக்குகளின் மந்தமான ஒளியும் அந்தக் கப்பலின் திண்மைக்கும் அழகுக்கும் சான்றுகளாக விளங்கின. அந்தக் கப்பலின் முந்நூற்று எண்பது பீரங்கிகளில் சில வெளிப்பட்டாலும், வெளிப்படாத பெரும்பான்மையான பீரங்கிகள் இதயத்துக்குள் மறைந்து கிடக்கும் பீதியைப் போல் மறைந்தே கிடந்தன. ஆனால் ஒரு வித்தியாசம். பீதி அவற்றுக்கு இல்லை, அவற்றை எதிர் நோக்குவோருக்குத்தான்.

அது கிட்ட வர வர ராணி சிந்திக்கலானாள். எந்தத் தைரியத்தில் அனந்த் தன்னையும், தன் தந்தையின் படகுகளையும் அந்தக் கப்பலுக்கருகே அழைத்துச் செல்கிறான் என்று. "இந்தப் பதினைந்து படகுகளைப் போல் மூன்று மடங்கு அதிகமான படகுகள் வந்தாலும் அந்தக் கப்பலிலுள்ள நாலைந்து பீரங்கிகளே அழித்து விட முடியும். அப்படியிருக்க எப்படி இவர் அந்தக் கப்பலுக்குள் ஏற முடியும்? ஏறினால், எப்படி உயிரோடு திரும்ப முடியும்" என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டாள் ராணி.

அவள் அப்படித் தன்னை வினவிக் கொண்ட தருணத்தில் காஸண்ட்ராவின் மேல் தளத்தில் நாலைந்து விளக்குகள் திடீரெனத் தோன்றின. அந்த விளக்குகளின் நடுவில் துப்பாக்கிகளை ஏந்திய நான்கு கொள்ளைக்காரர்களுடன் காப்டன் இங்க்லண்ட் நின்று கொண்டிருந்தான். முதன் முதலாகக் காஸண்ட்ராவை நெருங்க முற்பட்ட டெய்லரின் படகைப் பார்த்ததும் உற்சாகத்துடன் மேலிருந்தே கூவினான் இங்க்லண்ட், "டெய்லர்! எதிர்பார்த்தேன் இதை உன்னிடம். ராணி, அனந்த் இருவரையுமே கொண்டு வந்து விட்டாய். சரி. அனந்த் மேலே வரட்டும். அவன் வீரம் எத்தன்மையது என்பதை நாம் ஆராய்வோம்" என்று. அத்துடன், "யாரங்கே! காப்டன் மேலே ஏறி வர நூலேணியைத் தொங்க விடுங்கள்" என்றும் கூவினான் அதிகாரதோரணையில். பின்புறமிருந்த மாலுமிகளை நோக்கி. அவன் உத்தரவுகளைத் தொடர்ந்து பெருத்த நூலேணி ஒன்று விசிறப்பட்டது காஸண்ட்ராவிலிருந்து. அதை நோக்கிப் படகைச் செலுத்திய டெய்லர் ஏதும் பேசாமல் அதில் ஏறத் தொடங்கினான். அவனைத் தொடர்ந்து ஏறிய அனந்த், "ராணி! எனக்குப் பிறகு வில்வர் ஏறட்டும். அவனைப் பின்பற்றி நீ வா" என்று கூறிவிட்டு மளமளவென்று ஏணியில் ஏறலானான்.

இந்த ஏற்பாட்டின் காரணம் தெளிவாகப் புரிந்தது டெய்லருக்கு. தனக்குப் பின்னால் வரும் அனந்தின் கைத் துப்பாக்கி தன்னைத் தீர்த்துக்கட்ட அரை விநாடி கூட ஆகாது என்பதையும் வில்வருக்குப் பின்னால் வரும் ராணியும் கைத் துப்பாக்கி சுடுவதில் சப்பையில்லை யென்பதையும் உணர்ந்திருந்த டெய்லர் சர்வ சாதாரணமாக நிதானத்தைச் சிறிதும் இழக்காமல் நூலேணிப் படிகளில் ஏறிச் சென்றான். நூலேணியில் ஒருவர்பின் னால் இன்னொருவராக ஏறிய நால்வரும் மேல் தளத்தை அடைந்ததும் "டெய்லர்! கன்கிராஜுலேஷன்ஸ்" என்று பாராட்டுக் கூறிக் கை குலுக்கத் தன் கையை நீட்டினான் இங்க்லண்ட்.

டெய்லர் கையை நீட்டவில்லை. "இங்க்லண்ட்! நீ கைகுலுக்க வேண்டியது அனந்துடன்" என்று வெறுப்புடன் கூறித் தன் பின்னால் வந்து நின்ற அனந்தைக் காட்டினான்.

இங்க்லண்டுக்குச் சந்தேகமறப் புரிந்தது நிலைமை தனது எண்ணப்படி இல்லையென்பது. தவிர கப்பலின் மேல் தளத்தில் நின்ற அனந்த், அந்தக் கப்பலுக்குத் தான்தான் தலைவனைப் போல "மால்வான் தளபதி! உங்கள் படகுகளில் நான்கு படகுகள் தவிர மற்றவற்றைத் துறைக்கு அனுப்பிவிடுங்கள்! நீங்களும் நான்கு படகிலுள்ள உங்கள் பதினைந்து வீரரும் மேலே வந்தால் போதும்" என்று இரைந்து கூவினான்.

அப்படி அவன் கூவிய சமயத்தில் அவன் பக்கத்தில் நின்ற ராணியோ எட்ட நின்ற வில்வரோ ஏதும் பேசவில்லை. அவன் கட்டளையை எதிர்த்து இங்க்லண்ட் கூட வாயைத் திறக்கவில்லை. சங்கர்பந்த்கூட மறுக்காமல் அவன் சொற்படி நடந்து கொண்டார். மற்றப் படகுகள் திரும்ப, நான்கு படகுகள் மட்டும் கப்பலில் இணைக்கப்பட்டதும் மேல் தளத்துக்கு வந்த சங்கர் பந்தையும் அவர் வீரர்களையும், "வரவேண்டும் மால்வான் தளபதி!" என்று அனந்த் உபசாரமாகப் பேசினான். அவர் அந்த உபசாரத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. வெறுப்புக் கலந்த பார்வையைச் சுற்று முற்றும் வீசினார்.

வெற்றிலை கொடியில் புழுப் போன்ற பாம்பு உண்டு என்றும், இது வெற்றிலை போட்டுக் கொள்ளும்போது கடித்து விட்டால் உடனே மரணம் ஏற்படும் என்றும் ஒரு நம்பிக்கை மத்திய பிரதேச மக்களிடையே நிலவுகிறது. மத்தியப் பிரதேசத்தில் வெற்றிலையை நட்டவுடன் ஒவ்வொரு கொடியாகக் கொஞ்சம் பால் வார்த்து வருவார்களாம். இப்படிச் செய்தால் தோட்டங்களில் திரியும் நாகப் பாம்புகளால் வேலை செய்பவர்களுக்கு ஏதும் ஆபத்து ஏற்படாது என்று நம்புகிறார்.

பி. நாராயணன்




பெண்கள் தங்கள்
மனோபாவங்களை
அநேக அழகான வழிகளில்
வெளிப்படுத்துகிறார்கள்.
விமல்
அவற்றில்
ஒன்று!
VIMAL®
A RELIANCE PRODUCT
100% பாலியெஸ்டர் புடவைகள்


பெரியவருக்கு முன்னாலே சத்தியம் பண்ணுங்க—
வாழ்நாள் பூராவும் தினம் ராத்திரி
டார்டாய்ஸ் கொசுவர்த்திச் சுருள்
கொளுத்துவேணு !
கொசுவை விரட்டும், உறுதியாக.—
டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்.
என் கணவர் இவர். இவரிடம் டார்டாய்ஸ் கொசுவர்த்திச் சுருள் வாங்கக்
எப்போதும் கவனத்திலிருக்கட்டும்...
டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்.
தூக்கமின்மையா? இரவுதோறும் சாப்பாட்டுக்குப்பின் ஒரு டார்டாய்ஸ் கொசுவர்த்திச் சுருள் (கொளுத்துங்க... விழுங்கிடாதீங்க !)
இரவுதோறும் ஒரு டார்டாய்ஸ் கொசுவர்த்திச் சுருள்—பறந்து போகும் கொசுக்களெல்லாம்.
டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்.
தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
போர்ட், பம்பாய்-400 023.

''அனந்த்! உன்னைப் போன்ற முட்டாளை இதுவரை நான் பார்த்ததில்லை'' என்றார்.

''இப்பொழுதாவது உமக்கு அத்தகைய பரிச்சயம் ஏற்பட்டதற்கு நீங்கள் சந்தோஷப்பட வேண்டும்'' என்று பதில் சொன்ன அனந்த் தங்களைச் சுற்றிலும் தளத்தின் ஓரங்களிலிருந்து நெருங்க முற்பட்ட கொள்ளைக்காரர்களைக் கவனிக்கவே செய்தான். சுமார் நூறு கொள்ளைக்காரர்கள் சூழ்ந்து நெருங்க முற்பட்டார்கள், அனந்தையும் ராணியையும். அரவம் ஏதுமின்றி மெல்ல மெல்லப் பிசாசுகள் போல் நெருங்கிய அந்தக் கொள்ளைக்காரர்களை டெய்லரோ இங்கலண்டோ தடுக்கவோ அடக்கவோ முன்வரவில்லை. சங்கர் ..ந்தும் அவர் வீரர்களும் கடைசியாக ஏறி முடிந்ததும் சரேலென்று டெய்லரை நோக்கித் திரும்பி ''தளபதிக்கும் ..க்கும் ராணிக்கும் தனி அறை ஒன்றை ஏற்பாடு செய்யுங்கள்'' என்று கூறினான் அனந்த். ''தளபதியின் மற்ற வீரர்கள் தளத்திலேயே தங்கட்டும்'' என்றும் சொன்னான். டெய்லர் மற்றக் கொள்ளைக்காரர்களைப் பார்த்தான். ''ஹீ வாண்ட்ஸ் எ ரூம்'' என்று கொள்ளைக்கார மாலுமிகளிடம் கூறினான்.

அதில் ஒருவன் ''ஷ்யூர் ஹீ வாண்ட்ஸ் எ ரூம்'' என்று கூறி நகைத்தான் பெரிதாக.

அனந்தின் கண்கள் குடி வெறியுடன் கண்ணெதிரே வந்து நின்று நகைத்த அந்தக் கொள்ளைக்காரனைக் கூர்ந்து நோக்கின. ''நீ நகைப்பது எனக்குப் பிடிக்கவில்லை'' என்று சொற்களை உதிர்த்தன அவன் உதடுகள்.

''பிடிக்காவிட்டால் என்ன செய்வாய்?'' என்று கூறி நெருங்கினான் மாலுமி.

அடுத்த விநாடி அந்தப் பெரிய மாலுமி அனந்தின் கைகளில் உயரக் கிளம்பி அவன் தலைக்கு மேலே இரு முறை சுழன்றான், குயவன் கைச்சக்கரம் போல. திடீரெனத் தான் பட்சி என்ற நினைப்பில் ஆகாயத்தில் பறந்தான். இல்லை பட்சி இல்லை, தான் மீனாகத்தான் இருக்க வேண்டும் என்ற மெய்ஞானம் ஏற்படவே அலைகளை நோக்கி விரைந்தான் தலை கீழாக. அனந்த் டெய்லரை நோக்கித் திரும்பி ''ஹீ வில் மேக் எ குட் டைவிங் சாம்பியன் (தலை குப்புறக் குதித்து நீந்தும் வல்லமை இருக்கிறது இவனுக்கு)'' என்று நகைச் சுவையை மேலும் காட்டினான்.

டெய்லர் ஏதும் பதில் சொல்லவில்லை. அவன் பழுப்பு நிறக் கண்களில் பயங்கரச் சாயை மட்டும் படர்ந்து கிடந்தது. மேலும் அனந்தை நெருங்க முயன்ற மாலுமிகளைத் தடை செய்த டெய்லர் ''அனந்த்! நிரம்ப விளையாடிவிட்டோம். இதை இனி நிறுத்திக் கொள்வோம். நீ இங்கு வந்த காரணம் என்ன?'' என்று வினவினான்.

''நாளைக் காலையில் அதைப் பற்றிப் பேசுவோம். என் அறையைக் காட்டினால் நான் படுக்கப் போவேன். நீயும் உறங்கு டெய்லர். இது வரை விழித்து விட்டாய்'' என்று டெய்லரிடமும் அனுதாபம் காட்டினான்.

டெய்லரின் கண்களும் இங்கலண்டின் கண்களும் சந்தித்தன ஒரு விநாடி. அடுத்து டெய்லர் ஒரு மாலுமியை அழைத்து, ''இவர்கள் மூவரும் காப்டன் இங்கலண்டின் அறையில் தங்கட்டும்'' என்று உத்தரவிட்டான்.

அந்தக் கொள்ளைக்கார மாலுமி ஒரு விநாடி ஆச்சரியம் ததும்பும் கண்களுடன் டெய்லரைப் பார்த்தான். மறு விநாடி அம்மூவரையும் அழைத்துக் கொண்டு காப்டன் இங்கலண்டின் அறைக்குச் சென்று கதவைத் திறந்து விட்டான். உள்ளே சென்ற மூவரில் அனந்த் மிக்க மகிழ்ச்சியைக் காட்டினான். ''என்ன வசதியான அறை!'' என்று சொல்லிக் கொண்டு அங்கிருந்த ஒரு நாற்காலியில் சாய்ந்து எதிரே இருந்த மேஜை மீது கால்களைப் போட்டுக் கொண்டு உட்



''புடவை கேட்டியே! பணத்தைக் கொட்டிக் கொட்டி வாங்கினேன் . . . !''

கார்ந்தான். ''தளபதி! ராணி! நீங்கள் கதவைச் சாத்திவிட்டுச் சிறிது நேரம் அந்தக் கட்டிலில் ஒருவரும் கீழே ஒருவருமாகப் படுத்து உறங்குங்கள். காலையில் வேலை நிரம்ப இருக்கிறது'' என்று தூரத்திலிருந்த ஒரு கயிற்றுக் கட்டிலைக் காட்டிவிட்டுச் சிறிது நேரத்தில் கண்களை மூடி நித்திரையில் ஆழ்ந்து விட்டான்.

சிறிதும் சஞ்சலமின்றி உறங்கிய அவனைத் தளபதி எரிச்சலுடன் பார்த்தார். அவன் துணிவை நினைத்து ராணி அவனை வியப்புடன் நோக்கினாள். இப்படி அவ்விருவரும் அனந்தைப் பார்த்துக் கொண்டிருந்த சமயத்தில் நான்காவது ஓர் உருவம் மூடாத அந்தக் கதவை எந்த வித அரவமுமின்றித் திறந்து உள் புகுந்து சாத்தியது. சாத்திவிட்டுத் திரும்பி எதிரே இருந்த மூவரையும் ஆராய்ந்தது. அதன் இதழ்களில் மெல்ல ஒரு புன்முறுவல் அரும்பலாயிற்று. (தொடரும்)

# திருப்புமுனை

## ஜோதிர்லதா கிரிஜா



போட்டிக் கதை-7



சிவகுமாரனின் உள்ளம் பெரும் பரபரப்பில் ஆழ்ந்திருந்தது. ஐ.ஏ.எஸ். எழுத்துத் தேர்வில் அவன் தேறித் தேர்ந்தெடுக்கப்பட்டு இப்போது நேர்முகத்தேர்வுக்கு அழைக்கப்பட்டிருக்கிறான். தன் அம்மா வாய்க்கு வாய் சொல்லும் 'எங்க சிவகுமார் அதிருஷ்டக்காரன்...' என்ற கூற்றின் மெய்ம்மையைச் சோதித்துப் பார்த்துவிடவும் அவன் உள்ளம் விரும்பியது.

''என்னடா யோசனை? காப்பிக்காக இரண்டு தரம் கூப்பிட்டேன், உன் காதில் விழவில்லை. அதனால் நானே எடுத்துக்கொண்டு வந்து விட்டேன்... இண்டர்வ்யூ பற்றி யோசனையாக்கும்?'' என்றவாறு அவள் அவனிடம் காப்பியை நீட்டினாள். அவன் ஓர் அசட்டுச் சிரிப்பை உதிர்த்துவிட்டுக் காப்பியை வாங்கிப் பருகலானான்.

''...எதிர் வீட்டு வெங்கலட்சுமி என்னமோ பெரிதாகத்தான் பீற்றிக்கொள்ளுகிறாள்.—அவள் பிள்ளை அடுத்த வருஷம் ஐ.ஏ.எஸ். எழுதப் போவதைப் பற்றி. நீ போய்ப் பாஸ் பண்ணிவிட்டு, வேலையையும் வாங்கிக்கொண்டு வந்தபிறகு அவளிடம் சொல்லி நானும் பெருமையடித்துக் கொள்ளப் போகிறேன்.''

''அப்படியானால் வெங்க லட்சுமியின் கர்வத்தை அடக்குவதற்காகவேனும் நான் கலெக்டராகியே தீர வேண்டும் என்று சொல்லு...நல்ல வேளை, நீ கொஞ்சம் புத்திசாலிதான். அதற்குள் அவசரப்பட்டு நான் இண்டர்வ்யூவுக்குப் போக இருப்பதைப் பற்றி அவளிடம் உளறி வைக்காமல் இருந்தாயே!'' என்று சிரித்தான்.

அதைக் கேட்டுக் கொண்ட அவள் தானும் சேர்ந்து சிரித்துவிட்டு, ''சரியாய்ச் சொன்னாய். இண்டர்வ்யூவில் வேண்டாத பேரையெல்லாம் கழித்துக் கட்டி விடுவார்களாமே?'' என்று கவலையுடன் விசாரித்தாள். முகத்திலிருந்த சிரிப்பு அடியோடு மறைந்து கவலை அதில் தோய்ந்துவிட்டதைக் கவனித்த அவன் மனத்துள் சிரித்துவிட்டு, ''பரவாயில்லையே, அம்மா நீ! இவ்வளவு தெரிந்து வைத்திருக்கிறாயே? யார் இதையெல்லாம் உனக்குச் சொன்னது?'' என்று கேட்டான்.

கேட்டவாறே பெட்டியில் தன் துணிகளை அடுக்கி வைக்க முனைந்த மகனைப் பெருமையுடன் பார்த்துவிட்டு, ''வெங்கலட்சுமிதான் சொன்னாள். உன் அண்ணாகூட ஒரு தரம் சொன்னான்... சிபாரிசு இருந்தால்தான் ஏது ஒன்றும் நடக்கிறது என்றான். நாம் கூட முயற்சி செய்து பார்க்கலாம்'' என்றாள் ராஜம்மாள். கடைசி வாக்கியம் அடங்கிய குரலில் வெளிவந்தது.



பக்கத்து அறையில் இருந்த அப்பாவின் காதுகளில் விழுந்துவிடக் கூடாதே என்ற கவலையில் சொல்லப்பட்ட வாக்கியம் அது என்பதை அவன் புரிந்துகொண்டு வாய்விட்டுச் சிரித்தான்.

''என்னடா சிரிக்கிறாய்?''

''பரவாயில்லை. நீ இன்னும் கூட அப்பாவுக்குப் பயப்படுகிறாய். அதை நினைத்துச் சிரித்தேன்...''

''உன் அப்பா காதில் விழுந்தால் என்னைக் கொன்று போட்டு விடமாட்டாரா? குய்யோ முறையோ என்று குடியே முழுகிவிட்டது மாதிரி—என்னமோ நான் உனக்காக யாரையோ பார்த்து எதையோ கொடுத்துச் சிபாரிசுக் கடிதம் வாங்கியே வந்துவிட்டது மாதிரியல்லவா என்னை ஆட்டி வைத்துவிடுவார், ஆட்டி?... உன் அப்பா மாதிரிப் பிழைக்கத் தெரியாத மனிதரை நான் பார்த்ததே இல்லை. நேர்மை, நாணயம் நியாயம் என்ற பத்தாம் பசலித் தனமான வார்த்தைகளைப் பிடித்துக் கொண்டு இன்னும்



தொங்குகிற மனிதர்'' — இப்படிச் சொல்லி விட்டு ராஜம்மாள் பெருமூச்செறிந்தாள்.

அப்பாவின் நேர்மை தொடர்பு பெற்ற அந்நிகழ்ச்சி அவனுக்கு ஞாபகம் வந்தது. முப்பது ஆண்டுகளுக்கு முந்திய கதை அது. அப்போது அவன் பிறக்கவில்லை. ஆறும் படிவத் தேர்வு விடைத்தாள்கள் செட்டி நாட்டைச் சேர்ந்த ஒரு பெரிய பள்ளிக் கூடத்திலிருந்து திருத்துவதற்கு அவருக்கு வந்திருந்தன. அவரிடம் தாள்கள் வைத்திருந்ததை எப்படியோ கண்டு பிடித்த செட்டி நாட்டு ஆசாமிகள் ஐந்து பேர் அப்பாவைத் தேடிக் கொண்டு வந்தார்கள்.

அவர்களின் பிள்ளைகள் மொத்தம் ஏழு பேர் தேர்வு எழுதி இருந்தார்கள். அவர்கள் அனைவரும் தவறுவது உறுதி என்பதை அறிந்திருந்த அந்தப் பெற்றோர்கள் தலைக்கு ஆயிரம் ரூபாய் வீதம் கொடுப்பதாகவும் ஆங்கிலத்தில் எப்படியாவது அவர்களைத் தேறச் செய்துவிட வேண்டும் என்றும் கேட்டார்கள். அப்பாவுக்கு ரொம்ப ஆத்திரம் வந்து விட்டதாம். அவர்களை விரட்டி அனுப்பி விட்டாராம். அப்போது அம்மா படுத்த படுக்கையாய்க் கிடந்தாளாம். மருத்துவம் பார்க்கப் பண வசதி கிடையாதாம். நல்ல சாப்பாடு கிடையாதாம். இரண்டே புடவைகள் தானாம் அம்மாவுக்கு. ஒரு வகையில் அம்மாவின் ஆத்திரம் நியாயமானதுதான் என்று அநியாயத்திலும் ஒரு நியாயத்தை அவன் மனம் கற்பித்து நினைத்தது.

அப்பாவைப் பற்றி நினைத்து அவன் சிரித்துக் கொண்டான். எப்போதும் உபதேசந்தான். பொன்மொழிகள்தாம். யாரைப் பார்த்தாலும் நேர்மை, நியாயம், நாணயம் இவை பற்றிய சொற்பொழிவுகள்தாம். காலத்துக்குப் பொருந்தாத மனிதர் என்பது அவரைப் பற்றிய அவனது கணிப்பு.

அப்பாவின் மீது சிவகுமாரன் மரியாதை கொண்டதற்குக் காரணம் அவர் பிறருக்குச் சொன்ன அறிவுரைகளையெல்லாம் தமது சொந்த வாழ்க்கையில் தாமும் கடைப்பிடித்ததுதான்.

''என்னடா? கலெக்டர் ஆகப் போகிறயாக்கும்?'' என்ற கணீர்க்குரல் அவன் எண்ணங்களை நிறுத்தியது. அவன் நிமிர்ந்துபார்த்தான். அப்பா தாம் புன்சிரிப்புடன் வந்து நின்றார். அவன் வெட்கத்துடன் சிரித்தான்.

''சிவகுமார்! நாம் என்ன உத்தியோகம் பார்க்கிறோம், அல்லது தொழில் செய்கிறோம் என்பது பெரிசில்லே. எதைச் செய்தாலும் நேர்மை, நாணயம், நியாயம் இவற்றுக்குப் புறம்பாக நடக்காமல் நம் கடமைகளை ஒழுங்காய்ச் செய்ய வேண்டும். அதுதான் பெரிசு... நீ ஒரு பெரிய வாத்தியார் ஆகவேண்டும்



''நம்ம புனிதம்மாவுக்கு வேட்டியாவது லுங்கி யாவது வேணுமாம்! புடவை வேண்டாமாம்''

என்று நான் ஆசைப்பட்டேன்...'' — இந்த இடத்தில் தம் பேச்சை நிறுத்தி விட்டு அவர் அவனைக் கூர்ந்து பார்த்தார். அவன் முகம் சிறிது சிவந்து போயிற்று.

அவர் புன்னகை செய்து தொடர்ந்தார்: ''உனக்குத்தான் வாத்தியார் என்று சொன்னாலே பிடிக்காதே. உன் அம்மாவுக்குந்தான். உன் அம்மா வாத்தியார் என்ற சொல்லையே வெறுப்பவள். அவளையும் சொல்லிக் குற்றமில்லை. எனக்கு வாழ்க்கைப்பட்டு அவள் என்ன சுகத்தைக் கண்டாள், சதா வறுமை? நோய் இரண்டையும் தான் கண்டாள். ஒரு வகையில் அவள் வெறுப்பு நியாயமானது தான் என்று எனக்கே தோன்றுகிறது. எப்படியோ உன் அம்மாவின் விருப்பம் போல் நீ கலெக்டராகவோ, அண்டர் செக்ரடரியாகவோ ஆகப் போகிறாய்... நாணயமாக நடக்க வேண்டும். அவ்வளவுதான் நான் சொல்லுவேன். நீயாவது உன் அம்மாவுக்குக் கனகாபிஷேகம் செய்யப்பா. நான் தான் தவறி விட்டேன்....''

அவர் கடைசி வாக்கியத்தைச் சொல்லிக் கொண்டிருந்த போது ராஜம்மா அங்கே மறுபடியும் வந்தாள். அவர் பேச்சைக் கேட்டுவிட்ட வெட்கத்தில் அவள் மூக்கின் முனை சிவந்திருந்தது.

டில்லியில் நேர்முகத் தேர்வில் அவன் நன்றாகவே பதில்களைச் சொன்னான். தான் தேர்ந்தெடுக்கப்படுவோம் என்ற நம்பிக்கையும் கொண்டான். தேர்வாளர்களில் இரண்டு பேர் தமிழர்கள் என்பது அவர்களைப் பார்த்தவுடனேயே தெரிந்தது.

அம்மாவின் விருப்பம் போல் தனக்குப் பெரிய வேலை கிடைக்கப் போகிற நம்பிக்கை ஏற்படுத்திய மன நிறைவுடன் அவன் டில்லியின் ஒரு பேருந்து நிறுத்தத்தில் நின்றிருந்தான்.

விரைவாக வந்த ஒரு கார் திடீரென்று சற்று ஒதுங்கி நின்றது. அதன் விளைவாக எழுந்த கிரீச்சிடலில் திடுக்கிட்டு எல்லாருமே திரும்பிப் பார்த்தார்கள். சிவகுமாரனும் அவர்களில் ஒருவன். காரின் முன்னிருக்கையிலிருந்து இறங்கியவர் அவனை நேர்முகத் தேர்வு செய்த இரு தமிழர்களில் ஒருவர். அவர் காரை நிறுத்தியதே தனக்காக என்பதை அவர் தன்னைப் பார்த்துச் சிரித்து அருகில் வருமாறு பணித்ததிலிருந்து புரிந்து கொண்ட அவன் வியப்புடன் விரைந்து அவரை அணுகினான்.

''எங்கே போக வேண்டும்?'' என்று அவர் அன்புடன் கேட்டதும் கரோல்பாக் பகுதியில் இருந்த ஓர் ஓட்டலின் பெயரை அவன் சொன்னான்.

''நான் அந்த வழியாகத்தான் போகிறேன். ஏறிக் கொள்ளுங்கள்'' என்று அவர் அவன் பின்னிருக்கையில் அமர்ந்ததும், தாமும் அவனுக்கு அருகில் பின்புறமே உட்கார்ந்தார். ஓட்டுநர் காரைக் கிளப்பினார்.

''உங்களுக்குத் தேர்வு நிச்சயம்.. நேர்முகத் தேர்வில் நாங்கள் முக்கியமாகக் கவனிப்பது பர்ஸனாலிடியை. அது உங்களிடம் இருக்கிறது. மற்ற எல்லாமே இருக்கின்றன....''

''தாங்க் யூ ஸார்!''

''வடக்கேதான் காலி இடங்கள் தற்போது உள்ளன. பிறகு தெற்கே மாற்றிக் கொள்ளலாம். அது சரி, நீங்கள் வத்தலக்குண்டு கந்தரேச சர்மாவின் பிள்ளைதானே?''

அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவன் வியப்புடன் கழுத்தைத் திருப்பி அவரைப் பார்த்து, ''ஆமாம். நீங்கள்? உங்களுக்கு எப்படி என்னைத் தெரியும்?'' என்றான்.

அவர் சிரித்தார். ''உங்கள் அப்பா எங்களுக்கெல்லாம் வாத்தியாராக இருந்தவர். நான் பிஃப்த் பாரம் படித்த போது இங்கிலீஷ், மெத்ஸ் இரண்டுக்கும் அவர்தான் ஆசிரியர். அவர் வெறும் ஆசிரியர் மட்டுந்தானா?'' என்று அவர் ஒரு பெருமூச்சை உதிர்த்து விட்டுச் சிந்தனையில் ஆழ்ந்தவர் போல் மௌனமானார்.

''உங்களுக்கு என்னை எப்படித் தெரியும்?'' என்று அவன் மறுபடியும் கேட்டான்.

''உங்கள் விலாசத்தில் ஸன் ஆஃப் கந்தரேச சர்மா, ரிடையர்ட் டீச்சர் என்று மனுவில் குறிப்பிட்டிருந்தீர்களே? தவிர சொந்த ஊர் வத்தலக்குண்டு என்று வேறு எழுதியிருந்தீர்கள். உங்களுக்கு இண்டர்வியூ லெட்டர் அனுப்பிய போதே எனக்கு மனசில் நெருடியது....''

''அந்த லெட்டரில் கையெழுத்துப் போட்டிருந்தது நீங்களா?''

''ஆமாம். நானேதான்.''

''என்னிடம் படித்தவன் ஒருவன் ஹோம் மினிஸ்ட்ரியில் பெரிய பதவியில் இருக்கிறான் என்று அப்பா அடிக்கடி சொல்லுவதுண்டு. அந்த ரங்கராஜன் நீங்கள்தானா?''

''நானேதான். உங்கள் அப்பா ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறாரா?''

''அவருடைய இன்னொரு மாணவர் ஒருவர் போன வருஷம் அப்பாவைத் தற்செயலாகச் சந்தித்த போது உங்களைப் பற்றிச் சொன்னார். ..''

''அப்பாவுக்கு இப்போது எழுபத்தைந்து வயசு இருக்குமில்லையா?''

''எழுபத்தெட்டு ஆகிவிட்டது.''

''ஹோம் மினிஸ்ட்ரியில் கறை படியாத மிகச் சில கைகளில் என்னுடையதும் ஒன்று. அந்தப் பெருமை எல்லாம் உங்கள் அப்பாவுக்குத்தான்! உங்கள் அப்பாவிடம் படித்தவர்களில் யாருமே சோடை போகவில்லை. வசதியான வாழ்க்கை, என்னைப் போல் பெரிய உத்தியோகம் என்று அடைய முடியாதவர்களானாலுங்கூட, அவர்களில் பலர் நேர்மையான வாழ்க்கை வாழ்கிறார்கள். உன் அப்பா

வின் ஆளுமையின் கீழ் வந்தவர்களால் வேறு எப்படியும் வாழ முடியாது. ஐ ஆம் ஸாரி! நான் ஏதோ பிரசங்கம் செய்ய ஆரம்பித்து விட்டேன். உன் அப்பா திடமாக இருக்கிறாரா?'' — அவர் சட்டென்று ஏகவசனத்துக்குத் தாவியதை அவன் கவனித்துச் சிரித்துக் கொண்டான்.

''இருக்கிறார்...''

''இன்டர்வியூ லெட்டரை உன் அப்பா பார்க்கவில்லையா?''

''பார்த்தார்!''

''என் பெயரைப் பார்த்துவிட்டு அவர் ஒன்றுமே சொல்லவில்லையா?''

''இல்லை. நீங்கள்தான் அது என்பதை அவர் ஊகித்திருப்பார். ஆனால் அதைக் காட்டிக் கொள்ளவில்லை என்று நினைக்கிறேன். அப்புறம், இன்னாருடைய மகன் நான் என்று உங்களிடம் ரகசியமாகத் தெரிவித்து நான் அநியாயமாக ஆதாயமடையப் பார்ப்பேனோ என்ற பயம் அதற்குக் காரணமாக இருக்கலாம்!''.

''அதேதான்! நீ என்னைத் தெரிந்து கொண்டதாகவோ, நான் உன்னைத் தெரிந்து கொண்டதாகவோ உன் அப்பாவுக்குத் தெரிய வேண்டாம். அவர் மகன் என்பதற்காக உன்னை செலக்ட் பண்ணிவிட்டேன் என்று நினைத்துச் சிறுமைப்படக் கூடும் என்பதால்!''

''இல்லை. சொல்ல மாட்டேன்.''

''வேலையில் சேர்ந்ததற்குப் பிறகு சொல்லிக் கொள்ளலாம்!''

''சரி, ஸார்!''

''எங்கள் வீட்டுக்கு வந்து விட்டுப் போயேன்!''

''வேண்டாம், ஸார்! அப்புறம் யாராவது பார்த்தால் மதராசிக்கு மதராசியாக என்னை செலக்ட் பண்ணி விட்டீர்கள் என்று வம்பு வந்து சேரும். இப்போது உங்களுடன் நான் காரில் வருவதே தப்பு!''' என்றான் அவன்.

''அப்பாவுக்குப் பிள்ளை தப்பாமல் பிறந்திருக்கிறாய்!'' என்று ரங்கராஜன் சிரித்தார்.

அவன் இறங்கவேண்டிய இடத்தில் அவனை இறக்கி விட்டுவிட்டு அவர் விடைபெற்றுக் கொண்டார்.

''...ஓட்டல் அறைக்குச் சென்று சாப்பிட்டுப் படுத்த அவன் பெரும் சிந்தனையில் ஆழ்ந்தான். அப்பாவும் அம்மாவுமாக மாறி மாறி அவன் எண்ணங்களில் சுழன்று சுழன்று வந்தார்கள். முடிவில் அவன் அம்மா தோற்றுப் போனாள். எவ்வளவோ எதிர்பார்ப்புடன் காத்திருக்கும் அம்மாவிடம் மானசீகமாக மன்னிப்புக் கேட்டுக்கொண்ட அவன் களைப்புடனும் ஒருவகை நிம்மதியுடனும் கண் அயர்ந்தான்.

அவன் வீட்டுக்குள் நுழைந்ததும் நுழையாததுமாக அம்மா கேட்ட கேள்வி ''என்னடா சிவகுமார் பழந்தானே?'' என்பது தான். அவன் அப்பாவும் புன்சிரிப்புடன் நின்றிருந்தார். அண்ணாவும் மன்னியும்கூட ஆவலுடன் அவனை நோக்கியது தெரிந்தது.

அவன் கண்கள் தாழ்ந்தன. ''இல்லை, அம்மா! எனக்கு செலக்‌ஷன் கிடைக்காது'' என்று அவன் சோர்வு கொண்டவன்போல் அவர்களைக் கடந்து சென்றான். ராஜம்மாவின் முகத்து வெளிறல் அவனை என்னவோ செய்தது. அவன் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டான்.

அன்றிரவு மொட்டை மாடியில் காற்றாட உட்கார்ந்திருந்த அப்பாவிடம் சென்றான். மற்றவர்கள் கோயிலுக்குப் போயிருந்த நேரம்.

''அப்பா!''

''என்ன, சிவகுமார் ''

''உங்களிடம் பேச வேண்டும்!''

''வா, உட்கார்! என்ன சொல்லப் போகிறாய் '' — அவர் கண்களில் வியப்பு தெரிந்தது. அவர் மனசுக்குள் சிரித்தது போலவும் அவனுக்குத் தோன்றியது. 'ஏதோ காதல் விவகாரம்' என்று எண்ணிச் சிரிக்கிறார் போலிருக்கிறது என்றெண்ணி அவனும் சிரித்தான்.

''எனக்கு செலக்‌ஷன் ஆகிவிட்டது. ஆகவில்லை என்று பொய் சொன்னேன்.''

அவர் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''ஏன்? ஏன் பொய் சொன்னாய்?''

''நான் பி.டி. படிக்கப் போகிறேன்!''

''என்ன திடீரென்று? உன் அம்மா உடைந்து போய்விடுவாள்!''

''அதற்கு நான் என்னப்பா செய்ய முடியும்?'' — அவன் சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு டில்லியில் நடந்ததையெல்லாம் சொன்னான்.

''அதற்கும் உன் முடிவுக்கும் என்ன சம்பந்தம்?'' — அவர் புரிந்து கொள்ளாதவர் போல் நடித்தது அவனுக்குப் புரிந்தது.

''...சுந்தரேச சர்மாவைப் போலவே அவர் மகனும் ஒரு நல்ல ஆசிரியர், பல மாணவர்களைப் பண்படுத்தினவர் என்று பேர் வாங்க வேண்டும் என்ற பேராசை தான்!'' என்று அவன் பதில் சொன்னான். மொட்டை மாடியின் அரை இருட்டில் தன் சொற்கள் அப்பாவின் கண்களில் பனிரிடச் செய்த ஒளியை அவன் கண்டான்' அவரைப் புகழ்ந்து இன்னும் என்னவெல்லாமோ கூற நினைத்து வாய் வராமல் உட்கார்ந்திருந்தான். அவனது பிள்ளைப் பருவத்திலிருந்து இதுநாள் வரையில் அப்பாவைச் சந்தித்து, மரியாதை தெரிவித்து, அவரைப் புகழ்ந்து, வணங்கிச் சென்ற அவருடைய எண்ணிறந்த மாணவர்களையெல்லாம் அப்போது அவன் நினைவுகூர்ந்தான்.

சுந்தரேச சர்மா சட்டென்று அவனைப் பற்றி இழுத்துத் தம் தோளில் ஒரு குழந்தையைச் சாய்த்துக் கொள்ளுபவர் போலச் சாய்த்துக் கொண்டார். அவர் உதடுகள் துடிக்கப் பேச்சொழாமல் தவித்தது அவனுக்குத் தெரிந்தது. அவரது மௌனம் அவனையும் தொற்றிக் கொண்டது. ஆனாலும் அருகருகே இணைந்து துடித்த தந்தையின் இதயமும் தனயனின் இதயமும் ஒன்றோடொன்று பேசிக் கொண்டனவே!



''ஒரு Lightning call போட்டேன்....''
''என்னாச்சு?''
''Thundering Bill வந்திருக்கு!''
வ. தேனப்பன்



# நான் கண்ட ரஷ்யா

— அகிலன்



* மாஸ்கோ நோவோஸ்டி பத்திரிகை நிறுவனத்தில் இந்திய எழுத்தாளர்கள்.

* 1965ல் நோபல் பரிசு பெற்ற ரஷ்ய நாவலாசிரியர் மிகாயில் ஷோலகோவ்.

* கிர்கிஸ் மொழி எழுத்தாளர் சிங்கிஸ் ஐட்மேடோவ்

எழுத்தாளர் யூனியனின் முக்கியமான வேலைகள், வரும் கையெழுத்துப் பிரதிகளைப் பரிசீலித்துப் பதிப்புக்குக் கொடுப்பது, உறுப்பினர் விண்ணப்பங்களை ஆய்வு செய்வது, எழுத்தாளர்கள் தங்கள் படைப்புக்களை உருவாக்குவதற்கான உதவிகளைச் செய்வது, அவர்கள் அமைதியாக இருந்து எழுதுவதற்கான வசதிகளை ஏற்படுத்திப் பராமரிப்பது போன்றவையாகும். யூனியனில் உறுப்பினராக இல்லாத டாக்டர்கள், கடற்படை ஊழியர்கள், ஆசிரியர்கள் போன்றோர்களும் தங்கள் ஓய்வு நேரங்களில் நூல்கள் எழுதுகிறார்கள். இவர்களுடைய கையெழுத்துப் பிரதிகளும் பரிசீலிக்கப் பெற்று, தக்கவை பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

நூல்களுக்கான ஊதியம் கவிதையாக இருந்தால் ஒருவருக்கு ஒன்று முதல் இரண்டு ரூபிள்களும், உரைநடையாக இருந்தால் 24 பக்கங்கள் கொண்ட ஒரு 'பாரா'த்துக்கு 200 முதல் 400 ரூபிள்களும் அளிக்கப்படுகின்றன. அச்சிடும் பிரதிகளின் எண்ணிக்கை அதிகமானால் அதற்குத் தக்கபடி 'பாரா'த்துக்கு 600 முதல் 800 ரூபிள்கள் வரையில் அளிக்கப்படுகின்றன. ஜார்ஜியாவிலும் மற்றும் சில குடியரசுகளிலும் மக்கள் தொகை குறைவுதான். வழக்கமாக ஒரு பதிப்பு பத்தாயிரம் முதல் இருபதாயிரம் வரை தான் போடுவார்கள். என்றாலும் பல நூல்கள் ரஷ்யனிலும் பிற சோவியத் மொழிகளிலும் மொழி பெயர்க்கப் படுவதாலும், ரஷ்யனில் ஒரு பதிப்பு லட்சத்துக்கு மேற்பட்ட பிரதிகள் விற்பனையாவதாலும் எந்த மொழியில் எழுதினாலும் அவர் சிறந்த எழுத்தாளராக இருந்தால் அவருக்குக் கணிசமான வருமானம் கிடைக்கிறது. ஒரு குறிப்பிட்ட மொழியின் எல்லை சிறிதாக இருப்பதாலேயே, அந்த மொழியில் எழுதும் ஆசிரியரின் பெயர் அந்த எல்லைக்குள் மட்டும் அடைபட்டுக் கிடப்பதில்லை. எடுத்துக்காட்டாக ஓர் ஆசிரியரைச் சொல்லலாம்: கிர்கிஸ் என்ற மிகச் சிறுபான்மை

## ரஷ்யச் சிரிப்பு





✠ எழுத்துலக மேதை டால்ஸ்டாய் தமது எழுத்தறையில்.



✠ ஜார்ஜிய கவிஞர் ருஸ்தவேலியின் கவிதை ஆங்கில மொழி பெயர்ப்பை அகிலனுக்குப் பரிசளிக்கிறார் ஜார்ஜியப் பல்கலைக் கழகத் துணை வேந்தர்.

மொழி எழுத்தாளரான சிங்கிஸ் ஐட்மடோவின் நாவல்கள் சோவியத் நாட்டின் எல்லா மொழிகளிலும், வெளிநாட்டு மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டு இன்று அவர் உலகறிந்த ஆசிரியராகத் திகழ்கிறார்.

நூற்றுக்கு நூறு எழுத்தறிவு பெற்றவர்கள் வாழும் நாடு சோவியத் நாடு. உலகத்திலேயே அதிகமாக நூல்களைப் படிக்கும் வழக்கமுள்ளவர்கள் சோவியத் மக்கள். ஒரு நூலை வெளியிடுவதற்கு முன்பாகவே —தபால் வழி விற்பனை முறையின் வாயிலாக — எவ்வளவு பிரதிகள் போடுவது என்பதை நிச்சயம் செய்து கொள்கிறார்கள். நூல்கள் வெளிவந்த சுமார் ஒரு வார காலத்துக்குள் அவ்வளவும் விற்பனையாகி விடுகின்றன! மற்ற நூல்களை விட நாவல்களையே சோவியத் மக்கள் அதிகமாக விரும்பிப் படிக்கிறார்கள். நாவலாசிரியர் சிங்கிஸ் ஐட்மடோவுடன் 1973ல் நான் உஸ்பெக் குடியரசில் சுற்றுப் பயணம் செய்தபோது அவரைச் சூழ்ந்துகொண்ட வாசகர் கூட்டத்தைக் கண்டு திகைத்து விட்டேன். நம்முடைய நகரங்களில் திரைப்பட நட்சத்திரங்களுக்குக் கூடுகிற கூட்டத்தை விட அதிகமான கூட்டம்!

கடினமான ஆராய்ச்சியால் வெளிவரும் சில ஆழமான கருத்துள்ள நூல்களை அவர்கள் அதிகமான பிரதிகள் அச்சிடாவிட்டாலும்கூட அவற்றின் ஆசிரியர்களுக்குக் கணிசமான ஊதியம் தருகிறார்கள். மற்ற நூல்கள் பல்லாயிரக் கணக்கிலும் லட்சக் கணக்கிலும் அச்சிடப்படுவதால், நூல்களின் விலை மலிவாகவே உள்ளது. இதைத் தவிர அரசும் மானியம் அளித்து நூல்கள் குறைந்த விலையில் மக்களுக்குக் கிடைப்பதற்கு வழி வகை செய்கிறது.



ஜார்ஜியத் தலைநகர் டிபிலிஸியில் இந்திய எழுத்தாளர்கள் அகிலன், கோஸ்வாமி, கர்தார்சிங் துக்கல், வித்யாலங்கார்.

எழுதத் தொடங்குவோர், ஆசையிருந்தும் போதிய பயிற்சி பெறாதவர், பத்திரிகை — பதிப்பகங்களிலிருந்து தங்கள் கையெழுத்துப் பிரதிகளைத் திரும்பப் பெறுவோர் ஆகியோரிடம் ஓரளவு முணுமுணுப்பு இருக்கத்தான் செய்கிறது. இத்தகையதோர் இளைஞர்கள் கூட்டத்தை நான் கஸகஸ்தான் தலைநகர் ஆல்மா ஆட்டாவில் 73ல் சந்தித்தேன். பிரபலமான எழுத்தாளர்கள் தங்கள் எழுத்துக்களை வெளியிடவும் தங்களை யூனியனில் உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொள்ளவும் மறுக்கிறார்கள் என்பது அவர்களுடைய குற்றச்சாட்டு. அதற்கு வளர்ந்துவிட்ட எழுத்தாளர்களின் பதில்: ''வெறும் ஆசை இருந்தால் போதாது. கடுமையாக உழைத்து எழுத்தில் தேர்ச்சி பெற வேண்டும். அவர்கள் அவசரப்படுகிறார்கள்.''

'எழுத்தாளருக்கு அங்கே எழுத்துச் சுதந்திரமில்லை' என்ற குற்றச்சாட்டு உலகெங்கும் திட்டமிட்டுப் பரப்பப்பட்டு வருகிறது. ஏற்கெனவே நான் குறிப்பிட்டபடி பொதுவுடைமைத் தத்துவத்தைத் தம் எழுத்தால் தகர்க்க முனைவோருக்கு அங்கு சுதந்திரமில்லைதான். மற்றபடி நாட்டில் அங்கங்கே பொறுப்பில் உள்ள மனிதர்களின் கவனக் குறைவாலோ தன்னலத்தாலோ நடைபெறும் சீர்கேடுகளைச் சுட்டிக்காட்ட எவ்விதத் தடையுமில்லை. சிங்கிஸ் ஐட்மலோவ் எழுதிய ஒரு கடுமையான சமுதாய விமர்சன நூல் நாடகமாக்கப்பட்டுத் தொலைக் காட்சியில் நாடெங்கும் ஒலிபரப்பப்பட்டது.

எழுத்தாளர் ஸோல்ஸெனிஸ்டன் நாட்டிலிருந்து வெளியேற்றப்பட்டது பற்றி விசாரித்தேன். அவரைப் பற்றி ஒருசில சோவியத் எழுத்தாளர்களின் ஒருமித்த கருத்து இது: ''அவர் தம் திறமையைப் பற்றி அளவுக்கதிகமாகக் கற்பனை செய்து கொண்டவர். மற்ற எல்லா எழுத்தாளர்களையும் விடத் தாமே கெட்டிக்காரர் என்று தலைக்கனத்துடன் தற்பெருமை அடித்துக் கொண்டவர். சோவியத் யூனியனுக்குப் பகையான நாடுகளுடன் தொடர்பு கொண்டு தம்மைப் பற்றிப் பரபரப்பூட்டும் செய்திகளால் தமக்கு விளம்பரம் தேடிக்கொள்ள முயன்றவர். எந்தப் பொதுவுடைமைத் தத்துவத்தை முன்பு தீவிரமாக ஆதரித்தாரோ அதையே பிறகு தூற்றத் தொடங்கிவிட்டார். நாட்டைக் காட்டிக் கொடுத்தவர் அவர்.''

ஒன்றை மட்டும் என்னால் யூகித்துக் கொள்ள முடிந்தது. அவர் தமது அளவுக்கு மீறிய செருக்கால் மற்ற மற்ற எழுத்தாளர்களுக்கு எரிச்சலூட்டும் வகையில் நடந்து கொண்டிருக்கிறார். வெளி நாடுகளில் விளம்பரம் மிகுதியானவுடன் சமதர்மக் கொள்கையைக் குறைகூற முற்பட்டிருக்கிறார். எழுத்தாளர்களுக்குள் ஏற்பட்ட கொள்கை ரீதியான போராட்டத்தோடு கூட, அவருடைய சொந்த சுபாவமும் அவர் வெளியேற்றப்படுவதற்குக் காரணங்களாக இருந்திருக்க வேண்டும்.



''ஆபீஸ் டிராமாவில் நீங்க பியூன். நான் மானேஜர்!''
''சரிதான்! 'கடைக்குப் போய் எனக்காக பீடி வாங்கி வா'ன்னு டயலாக் பேசாதே. கோல்ட்ஃப்ளேக்குன்னு ஞாபகமாச் சொல்லு!''

## 10. ரஷ்யாவில் பிறந்தநாள்

ஜூன் 27ம் தேதி காலை எழுந்து குளித்து முழுகிவிட்டு, முதல் நாள் இரவு பார்த்து வந்த சாக்ரடீஸ் நாடகம் பற்றிக் குறிப்பு எழுதுவதற்காக டைரியைத் திறந்தேன். அன்றைக்கு என்னுடைய பிறந்த நாள். வழக்கமாக நான் அதை நினைவில் வைத்துக் கொள்வதில்லை. வீட்டில் ஏதோ ஒரு தித்திப்புப் பண்டம் செய்து குழந்தைகளுக்குக் கொடுப்பார்கள். சமயங்களில் ஒரு புதுக் கதர் வேஷ்டியும் துண்டும் வீட்டுக்குள்ளிருந்து வெளியில் வரும். ரஷ்யாவுக்குச் செல்வதற்கு முன்பு குடும்பத்தார் நினைவூட்டியதால் குறித்து வைத்திருந்தேன்.

நாடகம் பற்றிய குறிப்பை எழுதி விட்டு, அன்றைய வேலைகளைப் பற்றி ஒரு கண்ணோட்டம் விட்டேன். முற்பகலில் கவிஞர் புஷ்கின் கடைசியாக வாழ்ந்த வீட்டில் உள்ள கண்காட்சி சாலையைப் பார்க்கவேண்டும். பிறகு மதியச் சாப்பாட்டுக்குப் பின் லெனின்கிராடை விட்டு, ஜார்ஜியக் குடியரசின் தலைநகரான பிளிஸிக்கு விமானத்தில் பறக்க வேண்டும். வேலை அதிகமில்லை. சாமான்கள் துணிமணிகளை எடுத்துப் பெட்டிக்குள் அடுக்கி வைத்தேன். வந்தவுடன் புறப்படுவதற்கு வசதியாக உடுத்திக்கொண்டு சிற்றுண்டி சாலைக்குக் கிளம்பினேன்.

'சோவியத்ஸ்காயா' என்ற அந்தப் பதினெட்டு மாடி ஹோட்டலில் தரைப் பகுதியில் ஓர் உணவு விடுதியும், பதினெட்டாவது மாடியில் ஓர் உணவு விடுதியும் உண்டு. அவற்றைத் தவிர மூன்று மாடிக்கு ஒன்று வீதம் நான்கு சிற்றுண்டி விடுதிகளும் உள்ளன. ஒவ்வொரு சிற்றுண்டி விடுதியாக நான்கு சிற்றுண்டி விடுதிகளுக்கும் படையெடுத்துப் பார்த்தேன். எல்லாமே பூட்டிக் கிடந்தன! என்னைப் போலவே அந்த ஹோட்டலில் தங்கிய பயணிகளில் பலர் அங்கு மிங்கும் காலைச் சிற்றுண்டிக்கு ஆலாய்ப் பறந்து கொண்டிருந்தனர். பிறகு தான் காரணம் தெரிந்தது. தட்டுகள், கிண்ணங்கள், தம்ளர்களைச் சுத்தம் செய்யும் நீராவி இயந்திரத்தில் ஏதோ கோளாறு ஏற்பட்டு விட்டதாம். அப்போது எனக்குச் சார்லி சாப்ளினின் 'மாடர்ன் டைம்ஸ்' என்ற திரைப்படம் நினைவுக்கு வந்தது. எதற்கும் விஞ்ஞானத்தையும் இயந்திரத்தையும் நம்பியிருக்கும் மனிதன், ஒரு கோளாறு ஏற்படும்போது எவ்வளவு அவஸ்தைப்படுகிறான் என்பதை அதில் சித்திரித்திருந்தார். அந்த நெருக்கடி இப்போது வந்து விட்டது.

கடைசி முயற்சியாகப் பதினெட்டாவது மாடிக்குக் கிளம்பினேன். 'லிஃப்ட்' பத்திரமாகப் போய்ச் சேர வேண்டுமே என்ற கவலை இருந்தது. அந்த விடுதிக்குள் நுழையும்போது முற்பகல் பத்து மணி. சுமார் முந்நூறு பேர் சாப்பிடக் கூடிய கூடம் காலியாக இருந்தது. நாற்காலிகள் இருந்தன; மேசைகள் இருந்தன; ஆட்கள் இல்லை! காலைச் சிற்றுண்டிக்கான நேரம் முடிந்து விட்டது!

(தொடரும்)

வந்தருள் புரிக விரைந்து இது தருணம்
மாமணி மன்றிலே ஞான
சுந்தர வடிவச் சோதியாய் விளங்கும்
சத்தசன் மார்க்கசற் குருவே
தந்தருள் புரிக வரம்எலாம் வல்ல
தனிஅருட் ஜோதியை எனது
சிந்தையில் புணர்ப்பித்து என்னொடுங் கலந்தே
செய்வித்து அருள்கசெய் வகையே!

— திருஅருட்பா

# தங்கையே தனக்கு உதவி

எனக்கு வேலைக்கு உத்தரவு வந்துவிட்டது. திடீரென்று வெடித்தெழுந்த ஓர் இன்பத்தில் தேற்றைய தினம் வெகு தொலைவில் போய் விழுந்து விட்டது. இன்று புது யுகம்.

''அப்பாயின்ட்மெண்ட் ஆர்டரை முதல்லே சாமி படத்துக்கு முன்னுலே வெச்சுக் கும்பிடடா!'' என்ருள் என் தாய். மகிழ்ச்சிப் பெரு வெள்ளம் சிறிது அடங்கிப் பேச விட்ட போது.

ரயில்வேயில் நான்காம் நிலை ஊழியராகப் பணி புரியும் என் தந்தைக்கு இன்று முதுகு நிமிர்ந்து விட்டது. இவ்வளவு காலம் அவர் ஒருவராய்ச் சுமந்த குடும்ப பாரத்துக்குத் தோள் கொடுக்க இப்போது நானும் வந்து விட்டேன். ப்ரூஸ் லீயோடு மல் யுத்தம் செய்ய இப்போது தயார் என்பது போல் ஒரு வலிமை அவருள் திடீரென்று புகுந்து கொண்ட அடையாளமாய் என்னைப் பார்த்துச் சிரித்தார். ''வெரி குட், மை பாய். நீ இண்டர்வியூவில் பேசிவிட்டு வந்து அதன் விவரம் சொன்னப்பவே உனக்கு வேலை நிச்சயம்னு நான் உன்னண்டை சொல்லலே?'' என்ருர். அவர் அப்படி எதுவும் சொல்லவில்லை. ஆனல் இன்று பேச்சின் அர்த்தம் வார்த்தைகளில் இல்லை. முக பாவத்தில் குரல் தொனியில், கண் ஒளியில்,... இது ஒரு விசேஷம் இன்று.

முதல் தங்கை உமையாள் பின்னலைச் சுருட்டிக் கொண்டையாக முடிந்துகொண்டாள். சபதம் ஈடேறிக் குழல் முடிந்த



பாஞ்சாலியின் நினைவு ஒரு கணம் எனக்கு வந்தது. இதுவும் ஒரு காத்திருத்தலின் முடிவுதானோ? அப்பா ஒருவரின் சம்பாத்தியம் மட்டும் கொண்டு வர இயலாத மணநாளை இனி அண்ணனின் வருவாயும் சேர்ந்து இழுத்துக் கொண்டு வந்து நிறுத்தும் என்ற நம்பிக்கைதானோ இதன் அர்த்தம்?

''எப்போடா முத்து நீ வேலையில் ஜாயின் பண்ணணும்?'' என்று அப்பா என்னைக் கேட்டார்.

''ஒரு வாரத்தில்.''

''ஏதோ அந்த மட்டும் உள்ளூரிலேயே வேலை. தனியா ஹோட்டல் ரூம், சாப்பாடுன்னெல்லாம் செலவழிக்க வேணாம். நாலு காசு மிச்சம் பிடிக்கலாம். இந்த வருஷத்துக்குள் நம்ம உமையாளுக்கு ஒரு வழி செஞ்சுடலாங்க'' என்று அம்மா உற்சாகமாக அப்பாவிடம் கூறினாள்.

''அதெப்படி! இவனுக்கு ஆரம்பத்தில் பிடிப்பெல்லாம் போக மாசம் ஐந்நூறுதான் வரும். புதுக் கம்பெனி வேலைதானே? இந்தச் சம்பளத்தில் வருஷம் பூரா வேலை பார்த்தால் கூட ஒரு கல்யாணத்தை நடத்திட முடியுமா? இருபதாயிரத்துக்குக் குறைஞ்சு எந்தத் தடிப்பயல் தாலியைக் கட்டறேங் கறான்? அதுதான் பலவாட்டி பார்த்துட்டோமில்லை?''

''அது போகுதுங்க. ஒரு வருஷம் வேலை செஞ்சா ஆபீசில லோன் கேட்க முடியாதா? உத்தியோகம்னு ஒண்ணு இருந்தா அந்த உத்தரவாதத்தில் வெளியே கூட கடன் வாங்கலாமே!''

அவர்கள் அருகில் இடமேற்று எனக்கு மூச்சுத் திணறுவது போல் இருந்தது. மெல்ல எழுந்து வாசலுக்கு வந்தேன்.

''அண்ணா! உனக்கு வெளியில் போகணுமா? சைக்கிளைத் துடைத்து வைக்கட்டுமா?''

''என்னடா இவ்வளவு கரிசனம்?''

''நான்....இனிமே ப்ளஸ் டூவில் சேரலாமில்லை? என் ஃப்ரெண்ட் கண்ணனுடைய ஸ்கூல்ல ப்ளஸ் டூ வந்திருக்குது. அங்கே எனக்கு மாத்ஸ் குருப் கிடைச்சா நல்லாயிருக்கும். அதைப் பத்தி அவனை விசாரிக்கச் சொல்லட்டுமா அண்ணா?''

''சம்பளம் என்னவாம்?''

''அது ஒண்ணும் அதிகம் இல்லே.''

''அப்போ நன்கொடை கணிசமாப் பறிப்பாங்க.''

''நான் கண்ணனோட போய் ஒரு அப்ளிகேஷன் ஃபாரம் வாங்கிக்கிட்டு வரட்டுமா?''

''நன்கொடை ஏகமாக் கேட்டாங்கன்னா?''

''எந்த ஸ்கூல்லதான் கேக்கலே? மேலே படிக்கணும்னா கொடுத்துத்தான் ஆகணும்.''

நான் மௌனமாக இருந்தேன். அவன் என்னைக் கவலையோடு பார்த்தான்.

''இத்தனை நாள் நான் சும்மா வேடிக்கைக்காணும் உன்னை எதிர்த்துப் பேசினதையெல்லாம் ஒண்ணும் மனசுலே வைச்சுக்காதேண்ணா. வேணும்னா தோப்புக்கரணம் கூடப் போடறேன்.''

பையன் காதுகளைப் பிடித்துக் கொண்டு விட்டான்.



ஆர். சூடாமணி

''சரி, சரி, நாடகமெல்லாம் போதும். நாளைக்குப் போய் அப்ளிகேஷன் பாரம் வாங்கிட்டு வா.''

''ஓ, தாங்க்ஸ் அண்ணா! நீ ரொம்ப ரொம்ப நல்ல அண்ணா!'' புகழேந்தி முகமெல்லாம் களிப்புத் துலங்க முன்னை விட அதிகத் தீவிரமாய்ச் சைக்கிளைத் துடைக்கலானான்.

நான் தெரு மூலை திரும்பியதுமே என் இரண்டாவது தங்கை இறைவி எதிர்ப்பட்டாள். தட்டெழுத்துப் பயிற்சி நிலையத்திலிருந்து திரும்பிக் கொண்டிருந்தாள். பி.யூ.சி. தேறிய பிறகு மேலே படிக்க வகையின்றி இப்படி வேறு வழிகளில் பொழுது போக்கி வருபவள். நல்ல அறிவு, திறமை.

''என்ன அண்ணா, நான் வர நேரமாகுதேன்னு என்னைத் தேடி இழுத்துக்கிட்டு வர

அம்மா உன்னே அனுப்பினுங்களா?'' என்று சிரித்தான் இறைவி.

''இல்லேல்ல. நான்தான் சும்மா ஒரு ஃப்ரெண்டைப் பார்த்துட்டு வரலாம்னு கிளம்பினேன்.''

''ப்ரெண்ட் ஆணு, பெண்ணு?'' என்று அவள் கண் சிமிட்டினுள்.

நான் சட்டென்று அவளேக் கூர்ந்து நோக்கினேன். என் கழுத்தில் ரத்தம் ஏறு வதை உணர முடிந்தது. அந்தப் பேச்சை மாற்றி, ''அதெல்லாம் கிடக்குது. விஷயம் தெரியுமா இறைவி? எனக்கு வேலே ஆயிடுச்சு'' என்றேன்.

அவள் கண்கள் குபீரென்று ஒளிர்ந்தன. ''நிஜம்மாவா அண்ணு? கங்கிராஜுலேஷன் அந்தப் புதுக் கம்பெனி அஸிஸ்டெண்ட் மானேஜர் வேலேயா?''

''ஆமாம்.''

''ரொம்ப சந்தோஷம். இனிமேலாவது உன் முகத்தில் சிரிப்பைப் பார்க்கலாம்னு நினேக்கிறேன் அண்ணு.''

என் மனம் நெகிழ்ந்தது. இந்த வார்த் தையை எனக்காக இதுவரை யாரும் சொல்ல வில்லே.

''தாங்க்ஸ் இறைவி.''

''நான் வீட்டுக்குப் போய்ப் பாயசம் வைக் கிறேன். நீயும் சீக்கிரமே வந்துடு அண்ணு. அப்...பாடா, எனக்கு எத்தனே சந்தோஷமா யிருக்குது!''

நான் மேலே நடந்தேன். 'எனக்கு எத் தனே சந்தோஷமா யிருக்குது!' அவளுக்கும் சந்தோஷம். அவள் கண்களிலும் புதுப் பிரகாசம். ஏன்? இனிப் பட்டப் படிப்புப் படிக்க முடியும் என்ற நினேப்பா?

எனக்கு எப்போதடா ஒரு வேலேயாகும் என்று எல்லோரும் என் உத்தியோகத்தைத் தமக்கு ஒரு விமோசன வழியாகவா எதிர் பார்த்திருந்தார்கள்?

என் முதுகு பாரத்தில் வளேந்து வலிப்பது போல் இருந்தது. எத்தனே பேருடைய கனவு களுக்குப் பதில் சொல்வேனடா கடவுளே!

ஓர் உத்தியோகத்துக்காக நான் காத் திருந்த ஆவல் எனக்குத் தெரியும். எனக்கும் கனவு இருந்தது. எனக்கு, லோசனிக்கு....

''வேலே கிடைக்கிறதுக்கு முந்தி கல்யா ணம் செய்துக்கறது சரின்னு எனக்குத் தோணலே லோசனி.''

''நீங்க சொல்றது சரிதான். உங்க மனசு எனக்குப் புரியுது முத்து. உங்களுக்கு வேலே கிடைக்கிற வரைக்கும் நாம் காத் திருக்கலாம்.''

''எனக்குச் சீக்கிரமே கிடைச்சுடணும். சீக்கிரமே நாம் ஒன்னு சேரணும்.... ஏழையா யிருக்கிறது எத்தனே பெரிய சாபம் லோசனி!''

''ஏன் இப்படியெல்லாம் மனசொடிஞ்சு பேசறீங்க? ஏழைகளும் அழகழகாய்க் கனவு காணலாமில்லேயா? ஒரு நாள் உங் களுக்கு வேலே கிடைச்சு நம்ம கனவு பலிக்கும்.''

அந்த ஒரு நாள் இதோ வந்து விட்டது. ஆனல் கனவு? என் குடும்பத்தாரின் கனவு நெரிசலில் எங்கள் தனிக் கனவு நசுங்கிச் சிதைந்து விடாதா? என் திருமணத்தைத் தள்ளிப் போட வேண்டியதுதானு? லோச னியை இனியும் காத்திருக்கச் சொல்வது நியாயமா?

சிறிது நேரம் யோசனேயில் ஆழ்ந்து குறியின்றி நடந்த பிறகு, என் நண்பன் ரகுவை ஆலோசனே கேட்கலா மென்று பத்து நிமிட நடை தூரத்திலிருந்த அவன் வீட்டுக்குச் சென்றேன். வேலேயில்லாத அவ னுக்கு விரைவில் விடிவு வரும் என்று ஆறு தல் கூறிவிட்டு, என் பிரச்னேகளே விவாதிக் காமலே வீடு திரும்பினேன்.

வீட்டில் அன்று உணவு நேரம் சிரிப்பும் உல்லாசமுமாய்க் கடந்தது. இறைவி பால் பாயசம் செய்திருந்தாள்.

என் முதல் கடமை இவர்களுக்குத்தான். இந்த மகிழ்ச்சியைச் சிதைக்க எனக்கென்ன உரிமை? இந்தச் சுமை தாங்கியைக் காத லிக்கும் பாபத்துக்காக லோசனியும் என் போலவே மொட்டுக் கனவோடு காத்திருக்க வேண்டியதுதான்.

மாலே ஐந்து மணிக்குச் சட்டையை மாற்றிக் கொண்டேன். ''நான் கொஞ்சம் வெளியே போய் வரேம்மா.'' — லோசனி யைப் பார்த்து நிலேமையைச் சொல்லிவிட வேண்டியதுதான். அவள் கண்களுள் காணப் போகும் ஏமாற்றத்தைச் சந்திக்க மனசைக் கல்லாக்கிக் கொண்டேன். வேறு வழி?

செருப்பை மாட்டிக் கொண்டு படி இறங் கியபோது ''அண்ணு!'' என்று பின்னல் இறைவியின் குரல் கேட்டது. நின்று திரும் பினேன்.

''போறப்பக் கூப்பிடறதா நினேக்கக்கா தேண்ணு. ஒரு விஷயம் சொல்லணும்.''

'என்ன விஷயம் சொல்லப் போகிரு யென்று எனக்குத் தெரியும் இறைவி. உனக்கு பி.ஏ. படிக்க வேண்டும். பிறகு எம்.ஏ. படிக்க வேண்டும். உங்கள் கனவுகளே நிறை வேற்றிக் கொள்ளுங்கள். மூத்த மகன் என் ருலே கனவுகளின் பாதுகாவலன் என்று தானே அர்த்தம்.'

''சொல்லு இறைவி.''

''நீ....இப்போ வேலே ஆயிடுச்சு, இல் லேயா?''

''ம்...''

''அடுத்தது என்ன?''

''என்ன? நீதான் சொல்லேன்.''

''இதுகூடவா தெரியலே? கல்யாணம்.''

---

எங்களுடைய குடும்ப டாக்டராகிய நம்பி, (டாக்டர் மு. வரதராசனர் அவர்களுடைய மகன்) தம்முடைய அறையில் பல சுவையான வாச கங்களே எழுதி வைத்துள்ளார். அவற்றில் என்னே மிகவும் கவர்ந்த ஒன்று: -ஸ்ரீ. ஸ்ரீராம்

You do not get ulcer from what you eat.
You get ulcer from what is eating you!



அவன்: "என் மாமனாருக்கு ரொம்பப் பெரிய மனம்!"

இவன்: "அப்படியா...?"

அவன்: "ஆமாம்! தலை தீபாவளிக்கு நான் கேட்ட ரிஸ்ட் எச். எம். டி. கடிகாரத்துக்குப் பதில் சுவர்க்கடிகாரமே வாங்கிக் கொடுத்திட்டாரு!"

— உ. ராஜாஜி



''ஆமாம். உமா கல்யாணம்.''

''உன் கல்யாணம். உமாவுடையது அப்புறம்.''

''என்ன விளையாடறே?''

''அண்ணாவுக்குக் கல்யாணம் வர்றதேன்னு விளையாடறேன்.''

''இதோ பாரு...''

''எனக்கு உன் விஷயம் தெரியும் அண்ணா!'' என்றாள் அவள் மிருதுவாக.

நான் கண நேரம் பேசவில்லை. பிறகு ''எப்படி?'' என்றேன்.

''ஒரு நாள் எனக்கு என் சிநேகிதிங்க கிட்டேயிருந்து வந்த ரெண்டு கடிதாசுகளோடு உனக்கு வந்த ஒண்ணும் தவறுதலாய்க் கலந்து போயிடுச்சு. நானும் அவசரத்தில் பெயரைப் பார்க்காமக் கவரைப் பிரிச்சுட்டேன்.... ஸாரி அண்ணா. வேணும்னு செய்யலே. அப்புறம் நானே ஃப்ளாப்பை மறுபடியும் ஒட்டி உன் மேசை மேலே வச்சிட்டேன். என் அண்ணி பேரு லோசனின்னு எனக்குள்ளேயே ஆயிரம் வாட்டி திருப்பித் திருப்பிச் சொல்லிச் சந்தோஷப் பட்டுக்கிட்டேன்.''

நான் அசையவில்லை.

''வேலைக்காகத்தான் காத்திருக்கீங்க ரெண்டு பேரும், இல்லையா? இப்போ முதல்லே நடக்க வேண்டியது உங்க கல்யாணம். அண்ணி வீட்டுக்குத்தானே கிளம்பிப் போயிக்கிட்டிருக்கே? விஷயத்தைச் சொல்லி விடு.''

''இறைவி...! நான்... நான் எப்படிம்மா இப்போ என் கல்யாணத்தைப் பத்தி நினைக்க முடியும்? முதல்லே உமாவுக்கு ஒரு வழி செய்யணும். அப்புறம் புகழ் மேலே படிக்கணும். நீ மேலே படிக்கணும்....''

''நான் படிக்கப் போறதில்லே.''

அதிர்ந்து அவளை நோக்கினேன்.

''அதாவது உனக்குத்தான் வேலையா விடுச்சேன்னு நான் போய்க் காலேஜிலே சேர்ந்துடப் போறதில்லே. முதல்லே எனக்கு ஒரு வேலை தேடிக்கப் போறேன்.''

''வேலையா! உனக்கா?''

''ஏன், கூடாதா? டைப்பிங் ஹையர் எழுதியிருக்கேனே, பாஸ் ஆயிடுச்சுன்னு எங்க இன்ஸ்ட்ரக்டர் பிரைவேட்டா விசாரிச்சுக்கிட்டு வந்து சொல்லிட்டாரு. ஷார்ட் ஹாண்டும் கத்துக்கிட்டிருக்கேன். மும்முரமாத் தேடினால் வேலை கிடைக்காமயா போயிடும்? வேலை பார்த்துக்கிட்டே தபால் லேயோ ஈவினிங் காலேஜிலேயோ படிச்சு கிராஜுவேட் ஆக முடியும்கிற நம்பிக்கை இருக்குது...''

''ஆனா...ஆனா நீ ஏன் வேலை பார்க்கணும்?''

''உனக்கு உதவியா யிருக்க.''

''இறைவி...''

''மறுத்துச் சொல்லாதே அண்ணா. நான் இந்த விஷயத்தைப் பத்தி நிறைய யோசிச்சிருக்கேன். ஒருத்தர் சம்பாதிச்சுப் பல பேர் சாப்பிடறது இந்த நாளிலே முடியுமா? உனக்கு வேலையானதுமே எல்லாப் பொறுப்பும் உன் தலை மேலேயே ஏன் ஏறி அழுத்தணும்? உன் உதவியைப் பெற மட்டும் தான் எங்களுக்குப் பாத்தியதையா? உனக்கு உதவி செய்யும் பாத்தியதை இல்லையா எங்களுக்கு?''

''அதுக்காக? நீ பெண்...''

''பெண்ணுக்கும் சம உரிமை உண்டுன்னு புரிஞ்சுக்கிட்ட காலம் அண்ணா இது.''

''அதனாலே உனக்கும் படிக்க உரிமை இருக்குது.''

''சம உரிமை இருந்தால் சம பொறுப்பும் தானே இருக்கணும்?'' அவள் குரல் கனிந்தது. ''இந்தக் குடும்பத்திலே எல்லோரையும் கரையேத்தி விட்ட பிறகுதான் உனக்கு ஒரு வாழ்க்கை அமையணும்னா அது எந்தக் காலத்தில் நடக்கிறது? அலை ஓய்ஞ்சு சமுத்திர ஸ்நானம் செய்ய முடியுமா? மத்தவங்க வாழ்றதுக்காக நீ ஏன் அண்ணா உன்னைத் தியாகம் செய்துக்கணும்? நாங்களும்தான் வாழணும், அதே சமயம் நீயும்தான் வாழணும். ஒண்ணுக்காக இன்னொண்ணை நிறுத்தறது என்ன நியாயம்? நீ விரும்பற பெண்ணைக் கல்யாணம் செய்துக்க. அந்த லோசனியும் இங்கே வந்து நம்மில் ஒருத்தியாகி, நாம குடிக்கிற கூழையோ கஞ்சியையோ தானும் பகிர்ந்துக்கட்டும். நீயும் உழை. நானும் உழைக்கிறேன். எல்லோருமாய்ச் சேர்ந்து பாடுபட்டுச் சமாளிச்சால் எல்லோரையும் முன்னுக்குக் கொண்டு வந்து விடலாம். அதுதான் முழுமையான வாழ்க்கையாய் இருக்கும்னு எனக்குத் தோணுது. இல்லையா அண்ணா? நான் சொல்றதிலே என்ன தப்பு?''

''இறைவி!'' வியப்பும் நெகிழ்ச்சியுமாய் அவளை ஏறிட்டுப் பார்த்தேன். என் தங்கை!.. இந்த அன்பு, இந்த அக்கறை, இந்த நியாய புத்தி.... என் பார்வை குப்பென்று மங்கியது. அந்த மங்கலினூடே ஒரு பிரகாசம்: அவள் புன்னகை.

அம்மா உங்கள் கவனிப்பு கரை கடந்தது.

## படுத்தி வைக்கும்
## பாப்பாவையும் பாராட்டி
## வளர்க்கும் பாசக் கரமே



தீராத விளையாட்டுப் பிள்ளை அவள். எனினும் அவளை சீராட்டி வளர்க்க நீங்கள் எதனையும் செய்வீர்கள்: குளிப்பாட்டி, உடை உடுத்தி, உணவூட்டி, உடல் நலம் பேணிக்காப்பதில் நீங்கள் எடுத்துக் கொள்ளும் கவனம்தான் எவ்வளவு?

கருத்துள்ள அதே கவனம் பளிச்சிடுமே நீங்கள் அவளுக்கு தேர்ந்தெடுக்கும் பிஸ்கட்டிலும். திண்ணம் அதுவே, தீவிர சுகாதார முறையில் கைபடாத் தூய்மையோடு தயாரித்த பிஸ்கட். நீங்கள் அவளுக்கு ஊட்டும் உணவிலே உள்ளதைப் போன்ற நிகரான ஊட்டச்சத்து அதிலே: பால், சர்க்கரை, க்ளூகோஸ், செரிப்பதற்கு எளிதாக இழைய அரைத்த கோதுமை.

கண்மணிக்கென்று உங்கள் கரம் தொடும் அந்த பிஸ்கட். கரகரப்பானது சுவைமிக்கது. கொரித்து ரசித்து மகிழ்வாளே உங்கள் குழந்தை.

எண்ணிப் பாருங்கள்: 7 உலக விருதுகளை வென்றஇந்தியாவின் அதிநவீன பிஸ்கட் தயாரிப்பாளர்களின் படைப்பை.

பாப்பா படம் போட்ட இந்த வண்ணமய உறையை பார்த்து வாங்குங்கள்.




7, உலக விருதுகளை வென்றது.

everest/79/PP/195 tm

பார்லே
க்ளூகோ

**உங்கள் பாசத்தைப் பேசிடும் குழந்தை பராமரிப்பு பிஸ்கட்.**

# பத்தில் ஐந்து

## படவிமரிசனங்கள்

— கௌசிகன்



பஞ்சபூதம்

தீபாவளி சேலனுக்குத் தமிழ் திரையுலகம் ரசிகர்களுக்குப் பத்துப் படங்களைச் சமர்ப்பணம் செய்துள்ளது. அவற்றில் ஐந்தை இங்கு கவனிப்போம்..

### பட்டாக்கத்தி பைரவன்

ஜகபதி ஆர்ட் பிக்சர்ஸார் நடிகர் திலகம் தோன்றும் பட்டாக்கத்தி பைரவனை, மகாபாரதக் கர்ணனை நினைவில் கொண்டு உருவாக்கி யிருக்கிறார்கள். தன் பிறப்பறியாத கர்ணன் எப்படி வேதனைப்பட்டிருப்பான், தன்னைப் பெற்றுப் பேழையில் வைத்து ஆற்றிலே மிதக்கவிட்டுப் போன தாயாரைப் பற்றி அவன் எண்ணம் எப்படி இருந்திருக்கும் என்ற கற்பனையைத் தட்டிவிட்டிருக்கிறார் கதாசிரியர் தாசரி நாராயண ராவ். அன்றையப் பேழை இன்றைக்குக் குப்பைத் தொட்டியாகி நடிகர் திலகத்தைக் குமுறிக் கொந்தளிக்கச் செய்திருக்கிறது. அன்றைய குந்தியை இன்றைய மாலதியாக்கி சௌகார் ஜானகியைக் கதறிக் கண்ணீர் வடிக்கச் செய்திருக்கிறார். அர்ஜுனனையும் (ஜெய் கணேஷ்) கொண்டு வந்திருக்கிறார். மகாபாரதம் யுத்தத்தை அடிப்படையாகக் கொண்டதுதானே? அதே மாதிரி பைரவனின் பையில் பட்டாக்கத்தியைக் கொடுத்து, சரியான 'ஸ்டண்ட்' படமாக்கி யிருக்கிறார்கள். நடிகர் திலகத்தின் படமாயிற்றே, உள்ளத்தைத் தொடும் உணர்ச்சி மயமான கட்டங்கள் இருக்கும் என்று எண்ணிப் போகிறவர்களுக்கு ஏமாற்றம்தான். பைரவனின் வெறிச் சிரிப்பைக் கேட்டு, எகிறிக் குதித்துச் சண்டை செய்வதைப் பார்த்து அனுத்துக் கொள்ள வேண்டியதுதான். தன்னைப் பெற்ற தாயை இனம் கண்டுகொள்ளும் கட்டத்தில் மட்டுமே நடிகர் திலகத்தைக் காண முடிகிறது. அந்த உணர்ச்சிப் பிரவாகத்தை வெளியிட அவர் ஒருவராலேயே முடியும். மற்ற இடங்களில் வெறும் கொள்ளைக்காரப் பைரவனையே காண முடிகிறது.

ஜில் மாலிஷ் ரூபாவாக ஜெயசுதாவும் பூட்பாலிஷ் தீபாவாக ஸ்ரீதேவியும் வந்து நீண்ட நெடும் பாடல்களுக்கு ஆடிப் பாடி ஓடி, கூடிக் கும்மாளம் அடிக்கிறார்கள்—பிக்பாக்கெட்காரிகளாக. தீபாவைப் பைரவனின் சகோதரியாக்கியவர்கள் ரூபா யார் என்பதற்கு ஓர் உப கதையை உருவி விடப் போகிறார்களோ என்று பயந்து கொண்டிருந்தேன். நல்ல வேளை ரூபா யார் என்று விளக்காமலேயே கதையை முடித்து விட்டார்கள். கண்களை அகலத் திறந்து உருட்டி விழித்துக் கண்ணீர் பெருகச் செய்து பைரவனைப் பணிய வைக்கிறார் ஸ்ரீதேவி. பைரவனைக் காப்பாற்றக் குண்டடியைத் தாங்கிக் கண்களை மூடுகிறார் அவன் காதலியாக ஜெயசுதா.

நடித்த படங்களின் எண்ணிக்கை உயர்ந்து விட்ட இந்த நிலையில் புகழின் உச்சியில் அமர்ந்திருக்கும் இப்போது — நடிகர் திலகம் அழுத்தமான கதாபாத்திரங்களை ஏற்று நடிப்பதை மட்டுமே ரசிகர்கள் விரும்புவார்கள்.

பட்டாக்கத்தி பளபளக்கக் காணோம்.

### திசை மாறிய பறவைகள்

அக்ரஹாரத்துக் கதை — அழுத்தமான கதையும் கூட. கதாசிரியரின் கற்பனை, வசனகர்த்தாவின் பேனா முனைக் கூர்மை, பாத்திரங்களுக்கு உயிரூட்டி உலவ விடும் இயக்குனரின் திறமை ஆகியவற்றுக்காக எஸ். ஜெகதீசனை மூன்று முறை பாராட்டியாக வேண்டும். இவ்வளவு திறமைகள் இத்தனை நாள் எங்கே உறங்கிக் கிடந்தன?

இளசுகளின் உள்ளத்தில் துளிர் விடும் காதல் எப்படியெல்லாம் கவர்ச்சியாக, துடிப்பாகத் துள்ளலோடு இருக்கும் என்பதை ரொம்பவும் 'நேச்சுரலா'க உருவாக்கிக் காட்டியிருக்கிறார். சரத் பாபுவும், புது முகம் சுமலதாவும்தான் காதல் இளஞ்சிட்டுகள். காதல் காட்சிகளில் காணும் யதார்த்தமும், இணக்கமும், இங்கிதமும் இயல்பும் — ஏ ஒன்! சுமலதா ரொம்ப ப்ரீயாக நடித்திருக்கிறார். சரத் பாபுவோ கிராமத்து பிராமண இளைஞனாகவே மாறி இருக்கிறார்.

உஞ்சவிருத்திப் பிராமணராக ஜி. சீனிவாசனைப் பார்க்கும்போது, நாம் ஒரு பழங்காலக் கிராமத்து அக்ரஹாரத்துக்கே போய்விடுகிறோம். சிறப்பான நடிப்பு—பாத்திரப் படைப்பு.

படத்தின் பிற்பகுதி திரைப்பட ஃபார்மூலாப்படி போனாலும் முன் பாதியில் ரொம்பச் சிறப்பாகச் செய்திருக்கிறார் ஜெகதீசன்.



நல்லது. உணர்ச்சிகளை வெளிப்படுத்தப் பல சந்தர்ப்பங்கள் இருந்தும் அதைப் பயன்படுத்திக் கொள்ளவில்லை அவர். இந்த ரேட்டில் போனால் 'க்ளாமர் கேர்ள்' என்ற பாராட்டோடு முடிந்து விடும் அவரது திரையுலக வாழ்க்கை.

சோஃபியோ — புராணிக்காக — குழந்தை கண்ணுக்கு மட்டும் தெரியும்படியாக ஆஞ்சநேயரை உருவாக்கி (குழந்தைகள் ஆண்




## பட்டாக்கத்தி பைரவன்

அக்ரஹாரத்துப் பிராமணர்களின் வம்டாளப்புக்களை, கோணல் புத்தியைக் கொஞ்சம் ஓவராகக் காட்டி விருக்கிறரோ என்று தோன்றுகிறது. அவர்களின் உருவங்களைக் கோணு மாணுவென்று காமிரா ஜாலம் செய்து காட்டியுள்ளது, அவர்களின் வக்கிரங்களை உருவகப்படுத்தத்தான் என்றாலும், பார்ப்பவர் முகம் சுருங்குகிறது. மற்றப்படிக்கு பாலகிருஷ்ணனின் ஒளிப் பதிவு நம் கண்களை விரிய வைக்கிறது. விசுவநாதனின் இசையோ மனத்தை நிறைக்கிறது.

பறவைகள் திசை மாறிப் பறந்தாலும் ரசிகர்களின் இதயத்தில் வந்து இடம் பிடித்துக் கூடிவிடுகின்றன?




## மகாலக்ஷ்மி

உயிரும் உடலுமாக வாழும் தம்பதிகளைப் பிரித்துப் பிறகு சேர்த்து வைப்பது ரொம்பப் பழைய தீம். ராமாயணத்தில் சீதையே சந்தேகத்தின் பிடியில் அகப்பட்டு அவதிப்படவில்லையா? அவள் துன்பம் துடைக்க லவ குசர்கள் தோன்றினர்கள். மகாலக்ஷ்மி கதையிலும் பிரிந்த தம்பதிகளை இணைக்கக் குழந்தைகள் வருகின்றன. இக்கதைக்கான கருவை முல்லப்படி வெங்கடரமணு ராமாயணத்திலிருந்து உருவி, இக்காலத்து உடை அணிவித்திருக்கிருர். பாத்திரங்களைப் பேச வைத்திருப்பவர் வியட்நாம் வீடு சுந்தரம். அதில் விசேஷ சாதுரியம் தெரியவில்லை.

வில்லன் என்பவன் கதாநாயகனை விடத் திறமைசாலியாக, சாகஸக்காரனுக, சாமர்த்திய முடையவனுக இருக்க வேண்டும். அசோகனைப் போல் பூன் மீசையும் மை தீட்டிய விழி மேக்கப்பும், 'டிக்கியில் போட்டுடுவேன்' என்ற மிரட்டலும் கீச்சுக் குரல் கோமாளித் தனமுமாக நிச்சயம் இருக்கக் கூடாது. கதையை நடத்திக் கொண்டு போகிறவன் வில்லன்தான். அந்தப் பாத்திரத்தை உருவாக்குவதில் முக்கிய கவனம் செலுத்தாத வரை தமிழ்ப் பட உலகம் உருப்படப் போவதில்லை.

கதையில் எந்தப் பாத்திரத்துக்குமே அழுத்தமில்லாதபோது மக்கள் திலகம் ஜெய்சங்கரைக் குறைகூறிப் பயனில்லை.

முல்லைச் சிரிப்பும் மோகனப் பார்வையும் ஒய்யார நடையும் மட்டுமே நடிப்பல்ல என்பதைச் சங்கீதா புரிந்து கொண்டால்



டாயிற்றே!) அற்புதம் காட்ட நினைத்திருக்கிறார்கள். அசட்டுத்தனமாக இருந்தாலும் குழந்தைகளின் நடிப்பு கைதட்டலைப் பெறும் படியாக இருக்கிறது.

மகாலக்ஷ்மியின் பெயரைச் சூட்டி, மகா பலவானான அனுமனையும் புகுத்தி இருப்பதினால் அவர்களின் அருள் கிடைக்க வேண்டும். கிடைக்குமா?

## உதிரிப் பூக்கள்

முள்ளை மலராக்கிக் காட்டிய மகேந்திரன், இப்போது உதிரிப்பூக்களை மணக்கும் கதம்பமாகக் கட்டிக் கொடுத்திருக்கிறார். காலஞ்சென்ற புதுமைப் பித்தனின் 'சிற்றன்னை' என்ற சிறுகதைக்கு உயிரூட்டி ஒப்பற்றதொரு திரைக் காவியமாக்கித் தர இன்னொரு எழுத்தாளர் — வசன கர்த்தாவினால்தான் முடியும். அவரே இயக்குனராகவுமிருந்தால் படத்தின் ஒவ்வொரு ஃபிரேமையும் ஓர் ஓவியமாக்கிக் காட்ட முடியும். அந்தச் சாதனையைப் புரிந்திருக்கிறார் மகேந்திரன் இந்தப் படத்தில்.

வில்லன் சுந்தர வடிவேலுவாகத் தோன்றி, தாம் ஒரு திறமை மிக்க நடிகர் என்பதை மீண்டுமொரு முறை நிரூபித்திருக்கிறார் விஜயன். இதிலும் அவருக்கு ஜலசமாதிதான்! ஆனால் அவருடைய உதடுகளும் பார்வையும் ஜாலம் புரிந்திருக்கின்றன.

கணவனின் (விஜயன்) கொடுமைக்காளாகும் லக்ஷ்மியாக வரும் அஸ்வினி ஓர் அபூர்வமான படைப்பு. அவரது விழிகள், உதடு, நாசி எல்லாமே பேசாமல் பேசுகின்றன. நெஞ்சத்து வேதனையை, தவிப்பை, பீதியை, ஏக்கத்தை, மகிழ்ச்சியை, துக்கத்தை அப்படியே பிட்டுப் பிட்டு வைக்கின்றன. தமிழ்த் திரைக்கு ஒரு புது முகத்தை — புதுமையான முகத்தை அளித்திருக்கிறார்.

லக்ஷ்மியை மணக்க விரும்பி ஆனால் கிட்டாதவராகி எட்டப்போய்ப் பிறகு கிட்ட வரும் ஜெயகராக சரத் பாபு கச்சிதமாக நடித்திருக்கிறார். சுந்தர வடிவேலுவிடம் ரத்தம் கசிய அடி வாங்கிக் கொண்டு அதை ஆற்று நீரில் அலம்பியபடி 'உங்களைத் திருப்பி அடிக்க என்னால் முடியும். ஆனால் லக்ஷ்மியை நான் விதவையாக்க விரும்பவில்லை' என்று கூறிவிட்டு நிதானமாகப் போகும் இடம் க்ளாஸ்!

சூது வாது தெரியாத கிராமத்துப் பெண்ணாக, வறுமையின் வக்ரங்களோடு வருகிறார் லக்ஷ்மியின் தங்கை செண்பகமாக மதுமாலினி. இயற்கையான நடிப்பு. இங்கிதமான வசனங்கள். செண்பகத்தைத் துகிலுரிந்து கொடுமைப்படுத்தும் காட்சி புதுமையாக விரசமின்றி எடுக்கப்பட்டிருக்கிறது.

இந்த உதிரிப் பூக்களிலேயே ஒப்பற்ற மலராகத் தனித்து நிற்பவர் நாவிதர் கருப்பையாவாக வரும் சாமிக்கண்ணுதான். தம் பாத்திரத்தின் மூலம் மற்ற பாத்திரங்களுக்குமே ஒரு பளபளப்பை உண்டாக்கி விட்டார் சாமிக்கண்ணு. அற்புதமான அநாயாசமான நடிப்பு.

''போடா போடா பொக்கே, என்னுக் காட்டுக்குத் தெக்கே'' — என்ற இளையராஜாவின் பாடல் ஒரம்போ பாடலைப் போலப் பாபுலராகலாம். யார் கண்டது?

அயல் நாட்டுப் படங்களிலும் பத்திரிகைகளிலும் அற்புதமான இயற்கைக் காட்சிகளை, புல்வெளிகளை, மலைச் சரிவுகளின் வனப்பைக் கண்டு மகிழ்ந்து வியந்து 'இப்படியெல்லாம் நாம் என்றைக்கு....?' என்று ஏங்கிய காலமுண்டு. இனி அப்படி ஏங்கத் தேவையில்லை என்று உதிரிப் பூக்களின் காமிராக் காட்சிகள் நம்பிக்கை யூட்டுகின்றன.

## பஞ்ச பூதம்

கிராமக் கதையாக இருக்க வேண்டும், அதில் இளமையும் வேண்டும், பேய்க்கதைப் பாணியிலும் திகிலூட்ட வேண்டும், நாத்திகப் பிரசாரமும் ஆத்திகக் கிண்டலும் கலந்திருக்க வேண்டும், மக்கள் மறந்து போன பழைய நடிகர்களை நினைவுபடுத்தப் புகுத்த வேண்டும், காசைக் கரியாக்க இதைக் கலர்ப் படமாகவும் எடுக்க வேண்டும் என்று திட்டமிட்டு, பஞ்சபூதத்தை உருவாக்கி நம்மைப் பயமுறுத்தப் பார்த்திருக்கிறார்கள் யசோதா பிலிம்ஸார்.

ஊருக்கு வழி கேட்டு வரும் வளையல்கார வடிவேலுவை, அவ்வூரின் பெரியதனக்காரர் மகள் வள்ளிக்கண்ணு கண்டதும் காதல் கொள்கிறாள். அப்பாவின் அனுமதி கிடைக்கா விட்டால் என்ன? காதலித்தவனை வலுக்கட்டாயமாகக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு ஊரை விட்டே ஓடவும் செய்கிறாள். இப்படியொரு காரக்டரை எந்தக் கிராமத்துப் பெண்ணிடம் காண முடியும்? கற்பனைக்கும் ஓர் எல்லை வேண்டாமா?

ஐந்து அயோக்கியர்களாம் ஓர் ஊரில். அவர்களை ஒவ்வொருவராகக் கொன்று பழி தீர்த்துக் கொள்கிறாளாம் ஆவியாகிய வள்ளிக்கண்ணு. பாவம், சங்கீதா! அவர்தான் வள்ளிக்கண்ணுவாக வருபவர்.

பிரஹலாதன் தெருக் கூத்து வேறு; கருணி - ஏ. கருணாநிதியின் கழுத்தறுப்புகள் வேறு. மனோரமாவுக்கு இரட்டை வேடம். தாயாரும் மகளுமாக. மகள் பாலாமணிக்குக் கனகசபை(கருணி) தலையணை மந்திரம் கற்றுக் கொடுப்பது ரொம்ப அசிங்கம். கதை என்ற பெயரில் எதைத்தான் காண்பிப்பது என்ற வியவஸ்தை இல்லாமல் போய் விட்டது.

எம். ஆர். ராதா இன்று நம்மிடையே இல்லை. சொல்லக் கூடாதுதான். என்ன செய்வது? இப்படி ஓர் அறுவையைக் கடைசிக் காலத்தில் செய்திருக்க வேண்டாம். அவர் ஆத்மா சாந்தியடையட்டும்.

ஸ்ரீகாந்த் சார், இம்மாதிரிப் படங்களில் எல்லாம் நடித்து உங்கள் பெயரைக்கெடுத்துக்கொள்வானேன்? படப் பிடிப்பு பல இடங்களில் பல்லிளிக்கிறது. ஒளிப்பதிவோ உபத்திரவம் செய்கிறது. ஒரு பூதத்தைப் பார்த்தாலே தாங்க முடியாது — ஐந்து பூதங்களைப் பார்த்து விட்டாலோ?

# போலீஸ் ஸ்ட்ரைக் — சுதர்ஸன்



''எவரோ பட்டப் பகலில் வீட்டில் புகுந்து கிழவியைக் கொன்று நகைகளை அபேஸ் பண்ணி....''
''ஸாரி! நாங்கள் எதுவும் இந்தப் பீரியடிலே செய்ய முடியாது!''
''திருடு போயிருப்பது உங்க வீடுதான் என்பதையாவது நான் சொல்லலாமா?''





''நேற்று எனக்கு ஐந்து ரூபாய் லாபம்.''

''எப்படி?''

''நோ எண்ட்ரி வழியாக சைக்கிளில் திரிபுள்ஸ் போனேன். யாரும் என்னைப் பிடிக்கலே!''

(ஆளும் கட்சித் தொண்டர்): ''போலீஸ் ஸ்ட்ரைக் பிசுபிசுத்து விட்டது.''
''எப்படிங்க?''
''எங்கள் வட்ட காவல் நிலையத்தில் உள்ள நாற்பது காவலர்களில் முந்தாநாள் முப்பத்தேழு பேர் வேலைக்கு வரலே. நேற்று முப்பத்தெட்டு பேர் வேலைக்கு வரலே. இன்று முப்பத்தொன்பது பேர்தான் வேலைக்கு வரவில்லை!''

''போலீஸ் பாதுகாப்புக் கிடைக்கா விட்டால் என்ன? எங்கள் மந்திரி பாதுகாப்புக் கவசத்துடன் தேர்தல் பிரசாரம் புரியப் புறப்பட்டு விட்டார்.''







''போலீஸ்காரங்க ஸ்ட்ரைக்குக்கு அனுதாபம் தெரிவித்து நாமும் ஸ்ட்ரைக் பண்ணலாமா?''

''ஏய் மிஸ்டர்! என் பின்னாலேயே சுத்துகிறயே போலீஸைக் கூப்பிடவா?''

''அவங்க வர மாட்டாங்க! மக்கள் மன்றத்தை அழை!''



''வழக்கமாக நம்ம ஜார்ஜ் டவுன் மவுண்ட் ரோடு சென்ட்ரல் பகுதிகளில் காணும் போக்குவரத்து நெரிசல் இன்று காணோமே என்ன சங்கதி?''
''டிராபிக் கான்ஸ்டபிள்கள் ஸ்ட்ரைக்தான் காரணம்!''





''என்ன சார்! என் கை விலங்கை நீங்கள் சரியாகவே பூட்டலியே!''

''நீயே பூட்டிக்கோ! நாங்கள் இப்போ ஸ்ட்ரைக் தொடங்கிட்டோம்.''

''உங்கள் ஸ்ட்ரைக்கைத் திடீரென்று முடித்து விடாதீர்கள்.''
''ஏன்?''
''ஸ்ட்ரைக் ஜோக் நிறைய எழுதியிருக்கேன். பிரசுரமாவதற்குள் நீங்கள் ஸ்ட்ரைக்கை கைவிட்டால் அத்தனையும் வீணாகிவிடும்!''

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600 032. Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lenka
இலங்கையில் விலை 90 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப்பதிப்பு) 75 மலேயக் காசு

